# அம்ருதா

Amrudha Tamil Monthly

Volume 17 Issue 2 September 2022 Rs.25

ஆண்டு 17 இதழ் 2 செப்டம்பர் 2022 ரூ.25



**முற்கால தமிழ் நாகரிகம்**
பிரபு திலக்

**பண்பாட்டு அடையாளங்கள்**
இந்திரா பார்த்தசாரதி

## துருப்பிடித்த எல்லைகளை தூக்கி எறிந்த ஆளுமை
சாரா கேன்

ஆண்டு 17 இதழ் 02

அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

செப்டம்பர்-2022 விலை ரூ. 25



**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒமிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

## இந்த இதழில்...

04 முற்கால தமிழ் நாகரிகம்
**பிரபு திலக்**

06 ஏற்பியல்
**அழகியசிங்கர்**

08 பண்பாட்டு அடையாளங்கள்
**இந்திரா பார்த்தசாரதி**

13 துருப்பிடித்த எல்லைகளை தூக்கி எறிந்த ஆளுமை
**ஸிந்துஜா**

16 நேர்காணல்
**சாரா கேன்**

24 சிறுகதை
**சங்கர நாராயணன்**

28 தாமரை பாரதியின் உவர் மணல் சிறு நெருஞ்சி
**வேல் கண்ணன்**

30 கவிதை
**சு. வெங்குட்டுவன்**

37 வாழ்வு பேசிக் கடப்பதற்கே
**சஞ்சயன்**

46 வெய்யிலின் கொஞ்சம் மனது வையுங்கள் தோழர் ஃப்ராய்ட்
**ந. பெரியசாமி**

48 சாயாவனம்
**சந்தியா நடராஜன்**

52 சிறுகதை
**மாப்பசான்; தமிழில்: நாகரத்தினம் கிருஷ்ணா**

59 கவிதை
**பா. ராஜா**

60 தடை செய்யப்பட்ட இடம்
**விட்டல்ராவ்**

64 தர்மினியின் அயலாள்
**சு.கஜன்**

66 கடைசிப்பக்கம்
**சுப்ரபாரதிமணியன்**

# முற்கால தமிழ் நாகரிகம்!

## பிரபு திலக்

திருநெல்வேலியிலிருந்து திருச்செந்தூர் செல்லும் சாலையில் ஸ்ரீ வைகுண்டம் அருகே இருக்கும் இரண்டு அழகிய சிற்றூர்கள் ஆதிச்ச நல்லூர், சிவகளை. இந்த ஊர்களில் இரண்டுநூற்றாண்டுகளாக தொடர்ந்து நடைபெற்று வரும் அகழாய்வில் சமீபத்தில் கிடைத்துள்ள அரிய சான்றுகள், மிகவும் முற்கால தமிழ் நாகரிகம் இந்த பகுதிதான் என்பதை உறுதி செய்கின்றன. இரண்டு ஊர்களிலும் தற்போது நடைபெற்றுவரும் அகழாய்வில் தங்கத் துண்டுகள் கிடைத்துள்ளன. இது 3000 ஆண்டுகளுக்கு முன்பே தமிழர்கள் தங்கத்தைப் பயன்படுத்தி இருக்கிறார்கள் என்பதை மீண்டும் உறுதி செய்துள்ளது.

விஞ்ஞான அணுகுமுறையுடனும் மிகுந்த கவனத்துடனும் ஆதிச்சநல்லூரிலும் சிவகளையிலும் செய்யப்பட்டுள்ள அகழாய்வில் இதுவரை 200க்கும் மேலான முதுமக்கள் தாழிகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. எலும்புக்கூடுகள், உடையாத நல்ல முறையில் உள்ள மட்பாண்டங்கள், பலவகையான கிண்ணங்கள், உருண்டை வடிவான பானைகள், குடுவைகள், உருளை வடிவப் பாத்திரங்கள், பெரிய ஜாடிகள், மிகுதியான அளவில் மாவரைக்கும் கல், கழுத்தணிகள், கடகம், காப்புகள், வளையல்கள், மோதிரம், மகுடங்கள் போன்ற பலதும் கிடைத்துள்ளன.

முதலில் ஜெர்மானியர்கள்தான் இப்பகுதியில் வந்து ஆய்வுகள் செய்திருக்கிறார்கள். இனங்களின் வேர்களைக் கண்டறிவதுதான் அவர்களின் அக்கறை. அதனடிப்படையில் டாக்டர் ஜாகோர் என்ற பெர்லின் அருங்காட்சியக ஆய்வாளர் 1876ஆம் ஆண்டு தொடங்கி, தாமிரபரணியின் தென்பகுதியில் சுமார் 114 ஏக்கர் பரப்பளவு பரந்து காணப்படும் ஏரலில் ஆய்வுகள் செய்தார். இவர்தான் முதன்முதலில் இப்பகுதியை உலகின் கவனத்துக்குக் கொண்டு வந்தவர். இவருக்கு ஆதிச்சநல்லூரில் சில தாழிகள் கிடைத்தன. மேலும் மட்பாண்டங்கள், இரும்புபொருட்கள், எலும்புக் கூடுகளின் பகுதிகள், மண்டையோடுகள் ஆகியவற்றையும் ஜாகோர் சேகரித்தார். ஆனால், அவற்றை அப்போது அவர் வெளியிடவில்லை. இப்போது அவரது சேகரிப்புகள் பெர்லின் அருங்காட்சியகத்தில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.



ஜாகோரைத் தொடர்ந்து பாரிஸ் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த எம்.லோனிசு லாபிக்கு 1903 04 ஆண்டுகளில் பல மட்கல வகைகள், இரும்பு, வெண்கலப் பொருட்கள், தொங்கு விளக்குகள், இரும்பு வாட்கள் போன்றவற்றை ஆதிச்சநல்லூரில் கண்டெடுத்தார்.

அதன்பின்னர், இந்தியத் தொல்லியல் பரப்பாய்வுத் துறையைச் சேர்ந்த அலெக்சாண்டர் ரீ என்பவர் மேற்கொண்ட அகழாய்வில் ஆதிச்சநல்லூரில் கிடைத்த பொருட்கள் அனைத்தும் இங்கு தொன்மையான நாகரிகம் ஒன்றிருந்ததை உறுதிப்படுத்தின. இவர் சேகரித்த வெண்கலப் பொருட்கள், சிந்துவெளி நாகரிகத்தில் கிடைத்த தாய் தெய்வ அமைப்புடைய வெண்கலத் திருவுருவம் போன்றவை என்பது குறிப்பிடத்தக்கது.

“ஆதிச்சநல்லூர் ஊரிருக்கையாக இருந்திருக்க வேண்டும். ஆதிச்ச நல்லூருக்கு அருகில் உள்ள கொற்கையின் பண்பாட்டுக் காலத்துக்கும் முற்பட்டதாக இது இருக்க வேண்டும். கரிமம் 14 முறைப்படி கண்டுபிடிக்கப்பட்ட கொற்கையின் காலம் கி.மு. 785. கொற்கையிலிருந்து வடக்காக ஒன்பதுகி.மீ.தொலைவில் ஆதிச்சநல்லூர் இருக்கிறது. எனவே, முற்காலத்தில் சிறந்த வாணிக நகரமாக இருந்து, கடல் பின்னோக்கிச் சென்ற பின் தனது சிறப்பை இவ்வூர் இழந்திருக்க வேண்டும்“ என்கிற முடிவுக்கு அலெக்ஸாண்டர் ரீயின் ஆய்வுகள் வந்தன.

சங்க இலக்கியங்களின் காலகட்டத்தைச் சேர்ந்த தொல்லியல் ஆதாரங்களைத் தேடுவதுதான் அலெக்ஸாண்டர் ரீயினுடைய நோக்கம். இவர் ஆதிச்சநல்லூரில் ஜாகோரைவிட அதிக தாழிகளை கண்டுபிடித்தார். கிட்டத்தட்ட 1872க்கும் மேற்பட்ட தொல்பொருள்கள் இவரதுசேகரிப்பில் உள்ளன. முதன்முதலில் ஆதிச்சநல்லூரில் தங்கம் மற்றும் வெண்கல கலைப்பொருட்கள் மூடியுடன் கிடைத்து இவரது ஆய்வில்தான். மற்றும் வெண்கல எருமை, வெள்ளாடு, செம்மறியாடு, கொம்பினையுடைய மறிமான், சேவல்,

புலி, யானை முதலியவையும் கிடைத்தன. மனித எலும்புக்கூடுகள் முழுமையாகவும் பாகங்களாகவும் கிடைத்தன. விலங்கு உருவங்கள், இரும்புப்பொருட்கள், எண்ணற்ற பானை ஓடுகள் என்று அகழாய்வில் கிடைத்த அனைத்தையும் அலெக்சாண்டர் ரீ அட்டவணைப்படுத்தி பதிப்பித்தார். அவரது அறிக்கை, கீழ்த் தாமிரபரணிச் சமவெளியின் வரலாற்றுக்கு முந்தைய காலத்தின் பொதுவான தகவல்களைத் தருகின்றன.

"ஆதிச்ச நல்லூர் அகழாய்வு மூலம் சங்ககாலத்துக்கு நம்மால் தேதி குறித்துவிட முடியும். ஏனெனில், ஆதிச்சநல்லூர் புதை குழிகளில் சங்க இலக்கியங்களில் கூறப்படும் அடக்க முறைகள்தான் பின்பற்றப்பட்டுள்ளன" என்று ஆய்வாளர்கள் கருதுவது முக்கியமானது.

தமிழ்நாட்டில் திருநெல்வேலி பகுதிகளில் மட்டும்தான் இதுபோல் புதைகுழிகள் அதிகம் காணப்படுகின்றன. ஈமச் சடங்குக்கு கல் நடுகிற பழக்கம் உள்ள புதைகுழிகள் தமிழ்நாட்டின் மற்ற இடங்களில் கிடைத்துள்ளன. இதனடிப்படையில் ஆதிச்சநல்லூர், கல்நடுகிற பழக்கம் உருவாவதற்கு முந்தைய காலகட்டத்தைச் சேர்ந்தது என கருதலாம். கேரளாவில் மாங்காட்டு அகழாய்வில் கிடைத்துள்ளவற்றைவிட முற்காலத்தைச் சேர்ந்த பொருட்கள் ஆதிச்சநல்லூரில் கிடைத்துள்ளதும் குறிப்பிடத்தக்கது.

பெரும்பாலான தாழிகளில் முழுமையான எலும்புக் கூடுகள் கிடைத்துள்ளன. சில தாழிகளில் எலும்புக்கூட்டின் பகுதிகள் மட்டும்தான் காணப்படுகிறது. இந்த எலும்புகூடுகளின் ஆய்வு முடிவுகள் இங்கு வாழ்ந்த மக்கள் நீண்ட தாடையை உடையவர்கள் என்று தெரிவிக்கிறது. எலியட் ஸ்மித் என்பவர் இங்கு வாழ்ந்த மக்கள் ஆல்பைன் இனத்தின் ஒரு பிரிவினரான ஆர்மினிய மக்கள் எனக் கூறியுள்ளார். திராவிட இனத்தின் ஒரு கலவைக் கூறாக இந்த ஆர்மினிய இனக்கூறு கருதப்படுகிறது.

இந்த இரண்டு ஊர்களிலும் சமீப அகழாய்வில் தங்கம் கண்டெடுக்கப்பட்டுள்ளது. ஆதிச்சநல்லூரில் மீண்டும் இறந்தவர்களை புதைத்த இடத்திலும், சிவகளையில் முதல்முறையாக மக்கள் வாழ்விடப் பகுதியிலும் தங்கப் பொருள் கிடைத்துள்ளது.

சிவகளையில் முதுமக்கள் தாழிகள் மற்றும் மக்கள் வாழ்விட பகுதி என பிரித்து இரண்டு பகுதிகளில் அகழ்வாய்வு தொடர்ந்து நடைபெற்று வருகிறது. இங்கு இடுகாடுகளில் எடுக்கப்பட்ட முதுமக்கள் தாழிகளில் இருந்து எலும்புக்கூடுகள், பற்கள், மக்கள் பயன்படுத்திய பானைகள், இரும்பு பொருட்கள் ஆகியவை அதிகமாக கிடைத்துள்ளன. மக்கள் வாழ்விடப் பகுதிகளில் இருந்து மண்ணாலான புகைப்பான், தக்களிகள் (நூல் நூற்க கூடியது) மக்கள் பயன்படுத்திய பொருட்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. குறிப்பாக வாள்கள், கூர்முனை கருவிகள், கத்திகள் உள்ளிட்ட 40க்கும் மேற்பட்ட இரும்பாலான ஆயுதங்கள் கிடைத்துள்ளன.

தாமிரபரணி நதிக்கரை ஓரமாக இதுவரை நடந்த அகழாய்வுகளில் இறந்தவர்களைப் புதைத்த இடுகாட்டு மேடு பகுதிகளில் மட்டுமே அகழாய்வு நடத்தப்பட்டுள்ளது. ஆனால், முதல்முறையாக சிவகளையில் மட்டுமே தாமிரபரணி நதிக்கரை ஓரங்களில் மக்கள் வாழ்விட பகுதிகளில் அகழாய்வு நடைபெற்று வருகிறது. இதில் கிடைத்த பொருட்களை வைத்து வரும் நாட்களில் தமிழர்களுடைய பாரம்பரியமான நாகரிகம் வெளிவரும்; அதுமட்டுமில்லாமல் தாமிரபரணி நதிக்கரை ஓரம் எப்படியான நாகரிகம் இருந்தது, மக்கள் எவ்வாறான பழக்க வழக்கங்களை பின்பற்றி வாழ்ந்தனர் என்பதும் வெளியே வரும் என்பதால் இந்த ஆய்வு முக்கியமானது.

"சிவகளை அகழாய்வில் கிடைக்கும் பொருட்களை வைத்து பார்க்கும் போது இரும்பு காலகட்டத்திற்கு முந்தைய காலகட்டத்தில் இந்த பகுதியில் மக்கள் வாழ்ந்ததற்கான சுவடுகள் கிடைத்துள்ளன. குறிப்பாக செம்பு உலோகங்களால் ஆன மனித உருவ சிலைகள் கிடைக்கப்பெற்றுள்ளன. தாமிரபரணி என்றால் தாமிரம் அல்லது செம்பு உலோகம் என்று பொருள். எனவே, செம்பு தாதுகள் அதிகம் நிறைந்த இடமாக இருந்திருக்கும். இந்த பகுதிகளில் கிடைக்கும் பொருட்களை வைத்து பார்க்கும் போது இரும்பு காலத்திற்கு முன் செம்பு உலோக பயன்பாட்டில் இருந்த காலத்தில் மக்கள் வாழ்ந்ததற்கான அடையாளம் அதிகமாக உள்ளது. தற்போது கிடைத்த பொருட்களின் அடிப்படையில் சிவகளை 3 ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்தையதாக இருக்கலாம் என கருதப்படுகிறது" என்கிறார்கள்.

உண்மைதான், இந்த இரண்டு அகழாய்வுகளும் நம் முன்னோர்களின் கலாசாரத்தையும் சமூக பொருளாதார கட்டமைப்பையும் அறிந்துகொள்ள வாய்ப்புகளாக அமையும் என்பதில் சந்தேகமில்லை. தமிழ்நாடு, வரலாற்றுக்கு முந்தைய காலத்தின் பிறப்பிடம் என்பதும் தொன்மையான நாகரிகத்தினை உடைய ஒரு பிரதேசம் என்பதும் பல்வேறு வகைப்பட்ட ஆய்வுகள் மூலம் ஏற்கெனவே நிரூபணமாகியுள்ளது. என்றாலும் இப்போது ஆதிச்ச நல்லூரிலும் சிவகளையிலும் கிடைத்துள்ள தடயங்கள் கிட்டத்தட்ட கி.மு. 1000த்துக்கும் முன்னால் வரைக்கும் செல்லக்கூடும் என்று ஆய்வாளர்கள் எதிர்பார்க்கிறார்கள். அதாவது 3000 வருடங்களுக்கு முந்தையவை. இது தமிழர்களின் மிகவும் முற்கால நாகரிகம் என்பதுடன் மனிதன் வாழ்ந்த உலகின் தொன்மையான இடங்களில் தமிழ்நாடும் ஒன்று என்பதை உலகத்துக்குச் சொல்ல மீண்டும் நமக்கு ஒரு வாய்ப்பாக அமையும்.●

# ஏற்பியல்

## அழகியசிங்கர்

சுந்தர ராமசாமி, 1991ஆம் ஆண்டு 'காலச்சுவடு' ஆண்டு மலர் கொண்டு வந்தார். பெரிய முயற்சி அது. 293 பக்கங்கள் கொண்ட மலர் அது. இந்த மலரின் ஒரு பிரதியை விருட்சத்திற்கு அனுப்பியிருந்தார். இதற்கு விமர்சனம் செய்யும்படி கேட்டுக்கொண்டார்.

இந்த மலரில் சுந்தர ராமசாமி கூறுகிறார்: 'காலச்சுவடின் எட்டு இதழ்களும் இப்போது இந்தச் சிறப்பிதழும் வெளியாகியிருக்கின்றன. ஒரு ஆசிரியருக்குஇருக்கவேண்டிய பன்முக ஆற்றல்களில் பலவும் இல்லாத நிலையில் என் நண்பர்கள் பலரும் மனபூர்வமாக உதவியது மூலமே நான் இந்தப் பணியைச் செய்ய முடிந்தது.'

இன்னொரு இடத்தில்: 'காலச்சுவடைத் தொடர நான் அதிக அளவுக்கு என்னை ஊக்கப்படுத்திக்கொள்ள வேண்டியநிலை இப்போது. தமிழ் வாசகர்களிடமிருந்து மட்டுமே. அவர்கள் எண்ணிக்கையில் மிகக் குறைவாக இருப்பினும் கூட, நான் ஊக்கம் பெற்று வந்திருக்கிறேன். என்னுடைய நாளைய செயல்பாடுகளுக்கு அவர்கள் தரும் ஊக்கத்தை நான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்" என்கிறார்.

15 கட்டுரைகள், 10 கதைகள், 7 மதிப்புரைகள், 28 கவிதைகள், 2 நாடகங்கள் என்று இவ்விதழ் சிறப்பாகவே வெளிவந்திருக்கிறது. இம்மலரைப் படிக்கும்போது சுந்தர ராமசாமியின் முயற்சி அபார முயற்சியாகத் தோன்றுகிறது. சிறப்பாகத் தயாரிக்கப்பட்டிருக்கும் போற்றி பாதுகாக்க வேண்டிய மலர். ஆனால், இந்த மலருக்கு வந்தவிமர்சனங்கள் மோசமான பார்வையைக் காட்டுகிறது.



இந்த சிறப்பு மலரை ஐராவதம் விருட்சத்தில் விமர்சித்திருந்தார். அதில், 'சுந்தர ராமசாமி தனக்குப் பிடிக்காத இலக்கிய வாலிகளை வீழ்த்த மதிப்புரையாளர்களாகிய சுக்கிரீவர்களைப் பயன்படுத்துகிறார்' என்று கூறியிருந்தார் ஐராவதம்.

ஏன் இதுமாதிரி நிகழ்கிறது?

காரணம், சுந்தர ராமசாமி தேர்ந்தெடுத்த படைப்பாளிகள். இதில் எழுதிய எல்லோரும் சுந்தர ராமசாமிக்கு வேண்டிய எழுத்தாளர்கள். மலர் சிறப்பானதுதான். ஆனாலும், ஞானக்கூத்தன் ஒரு கட்டுரையில் கூறியிருப்பதுபோல்,'காலச்சுவடு சிறப்பு மலர்' அன்று பல எழுத்தாளர்களுக்கு ஏற்பியலாக இல்லை.

இது தவிர்க்க முடியாதது. ஆனால், அதை ஏற்றுக்கொள்ள முடியாதவர்களுக்கு, சுந்தர ராமசாமியின் சிறப்பு மலரை ஏற்க முடியவில்லை. ஐராவதம், அவருடைய பங்கும் காலச்சுவடில் ஏற்கப்பட்டிருந்தால் வேறுவிதமாக காலச்சுவடு மலரை கணித்திருப்பார். ஐராவதம் இலக்கிய உலகில் 30 ஆண்டுகளுக்கு மேலாக இயங்கியவர். அவரை யாரும் ஏற்கவில்லை என்பதால் ஏற்பட்ட ஆதங்கம்தான் அவருடைய விமர்சனத்திற்குக் காரணம்.

"ஆம், இத்தகைய இலக்கிய அரசியல் சூழ்ச்சிகள்தாம் நீல. பத்மநாபனின் 1200 பக்க நாவலை நியாயப்படுத்துகிறது" என்கிறார் ஐராவதம். தன்னை பொருட்படுத்தப்படவில்லை என்ற ஆத்திரம்தான் அவரை அப்படி எழுத வைத்திருக்கும். சுஜாதாவும் இந்த மலரை அப்போது வெளிவந்து கொண்டிருந்த 'சுபமங்களா' என்ற பத்திரிகையில் மோசமாக விமர்சனம் செய்திருந்தார்.

இந்த இடத்தில் ஒன்றைக் குறிப்பிட விரும்புகிறேன். இந்த மலரில் பலரைக் கண்டுகொள்ளவில்லை என்பதும் உண்மை. ஞானக்கூத்தன் 'கட்டுரைக்காக' என்ற புத்தகத்தில் 'ஏற்பியல்' என்ற தனி அத்தியாயத்தில் ஒன்றைக் குறிப்பிடுகிறார்.



இன்று பல ஏற்பியல்கள் உள்ளன. ஒவ்வொரு பத்திரிகைக்கும் ஒவ்வொரு ஏற்பியல் உள்ளது. குமுதத்தின் ஏற்பியல் விகடன், கல்கிக்கு இல்லை. விகடனுக்கே இரண்டு தலைமுறைக்கு முன்பிருந்த ஏற்பியல் இன்று இல்லை. பெரிய பத்திரிகைகளின் ஏற்பியல் ஒத்து வராததால்தான் சிறுபத்திரிகைகள் வந்தன.

சிறுபத்திரிகை எழுத்தாளர்களிடையேயும் பல ஏற்பியல்கள் உள்ளன. இந்த விதமாகத்தான் சுந்தர ராமசாமி தனக்குகந்த படைப்பாளிகளின் படைப்புகளை வாங்கி 'காலச்சுவடு சிறப்பு மலர்' கொண்டு வந்தார். இதைத் தவறாக நான் கூறவில்லை.

அதற்குஎதிர்ப்புதெரிவித்தவர்களுக்குதன்னுடைய படைப்புகளை அங்கீகரிக்கவில்லை என்ற கோபம் இருந்திருக்கலாம்.

சுஜாதாவால் ஏன் இந்த மலரை ஏற்க முடியவில்லை? அவருடைய ஏற்பியல் வேற மாதிரி இருக்கிறது. அவர் இப்படி ஆரம்பிக்கிறார்: 'தமிழ்ப் பத்திரிகைகளை தற்போது தெளிவாக இருவகையில் பிரிக்க முடிகிறது. வெகுஜனப் பத்திரிகைகள், சிறு பத்திரிகைகள். இவ்வாறான ஒன்றுக்கொன்று குறுக்கிடாத பிரிவு மற்ற மொழிகளில் இருக்கிறதா என எனக்குத் தெரியவில்லை. மலையாளத்தில் கிடையாது என்று நண்பர் நீல. பத்மநாபன் சொன்னார். தமிழில் இரண்டு உலகங்களும் வெவ்வேறு தளத்தில் ஒன்றை ஒன்று கண்டுகொள்ளாமல் இயங்கினாலும், இரண்டையுமே உருவம், உள்ளடக்கம் போன்றவற்றில் மிகவும் எதிர்பார்க்க முடிகிறது. சிறு பத்திரிகைகளிலும் ஒரு சிலர்தான் திரும்பத் திரும்ப எழுதுகிறார்கள். ஓரிரண்டு ஓவியர்கள்தான் படம் போடுகிறார்கள். ஒருவரை ஒருவர் விமர்சித்துக் கொண்டு, கட்டுரைகள் எழுதிக்கொண்டு, சில விஷயங்கள் திரும்பத் திரும்ப வருகின்றன. ஸ்டரக்சரலிஸம், ஆல்பேர் காம்யு, தாஸ்தாய்வஸ்கி, க.நா.சு., மௌனி, எக்ஸிஸ்டென்சியலிஸம், புரிசை தம்பிரானின் தெருக்கூத்து - இம்மாதிரி சில தலைப்புகளில் கட்டுரைகளை அடக்கிவிடலாம். நவீன தமிழிலக்கியம் என்பது இவை இரண்டுமே இல்லை என்கிற சித்தாந்தத்தை உங்கள் முன் வைக்கிறேன்.'

பின் காலச்சுவடு சிறப்பு மலரை கடுமையாக விமர்சிக்கிறார். சுஜாதா பிரபலமான எழுத்தாளர். அவருக்குப் பல விஷயங்களைக் கிரகித்து வாதாட முடிகிறது. ஆனால், சுந்தர ராமசாமியின் ஏற்பியல் சுஜாதாவை ஏற்கவில்லை.

காலச்சுவடு மலரில் வந்துள்ள சிறுகதைகளை விமர்சிக்கும்போது, "எல்லோரிடமும் ஒரு ஸ்லோமோஷன் தன்மையும் சிறுகதை வடிவத்தைப் பற்றிய தீர்மானமின்மையும் இருக்கிறதைக் கவனிக்கிறேன்" என்கிறார் சுஜாதா.

உடனே சுந்தர ராமசாமி, 'சுஜாதாவின் வெளிநாட்டுக் குடை' என்று தாக்கினார். 'காலச்சுவடு மலரில் வெளியாகி இருக்கும் விஷயங்கள் வறண்ட, சிக்கலான, கடுமையான மொழியில் எழுதப்பட்டவை அல்ல. ஒரு 300 பக்கங்கள் உள்ள இந்த மலரின் பெரும்பகுதியை ஒரு வாசகன் எவ்விதச் சிரமுமின்றி படித்து விட முடியும். தமிழ்ச் சூழல் பற்றி அறிந்திருக்கும் சுஜாதா அவருடைய அறிவை ஒளித்து வைத்துக்கொண்டு காலச்சுவடை உற்சாகமாகக் கிழிக்கிறார்' என்கிறார் சுந்தர ராமசாமி.

விருட்சத்தில் ஐராவதம் எழுதிய விமர்சனத்திற்கும் சுந்தர ராமசாமி தன் எதிர்ப்பை தெரிவிக்காமல் இல்லை. விருட்சம் ஆசிரியருக்கு எழுதியதில், '300 பக்கங்கள் கொண்டதாகக் காலச்சுவடு மலரை நான் வெளியிட்டுள்ளதன் நோக்கம் என்னை நவீன இலக்கிய உலகில் ஞானத்தந்தையாக அறிவிக்கும் முயற்சி என்று உங்கள் மதிப்புரையாளர் கூறுகிறார். காலச்சுவடு மலரில் எந்தப் பக்கத்தில் வெளியாகியிருக்கும் எந்த வரிகள் அல்லது மனோபாவம் அவருக்கு இந்த உண்மையை அல்லது சந்தேகத்தைத் தோற்றுவித்தது என்பதற்கான ஆதாரத்தைக் கோடி காட்டக்கூட வில்லை' என்று கூறினார்.

இன்னும் பலரும் காலச்சுவடில் எழுதியவர்கள் காரசாரமாகக் கடிதங்கள் எழுதியிருந்தார்கள். அந்த சிறப்பு மலரில் இடம்பெற்றவர்களும் ஐராவதத்தைச் சாடினார்கள். காலச்சுவடு மலர் விமர்சனத்திற்கு இவ்வளவு எதிர்ப்புக் கடிதங்களா? ஏன் இப்படி?

எல்லாம் ஏற்பியல்தான் காரணம். இப்போதும் பலவிதமாகஇந்தஏற்பியல்இயங்கிக்கொண்டிருக்கிறது.

**அழகியசிங்கர்** <navina.virutcham@gmail.com>

# பண்பாட்டு அடையாளங்கள்

## இந்திரா பார்த்தசாரதி

தொன்றுதொட்டு வரும் மரபுக்கும் ஸ்தாபனத்துக்கும் எதிரான கருத்துக்கள் வைக்கப்படுவது, மேல்நாட்டுச் சிந்தனையின் தாக்கம் என்ற தவறான எண்ணம் நம் நாட்டிலே பரவியிருக்கிறது. இத்தகைய எதிர்க் குரல்கள்தாம், நம் இந்திய சிந்தனைப் பண்பாட்டின் இன்றிமையாத அம்சம் என்பதை நாம் உணர வேண்டும்.

'ஸ்தாபனம்' என்றால் என்ன?

காலந்தோறும் மனிதச் சிந்தனைப் பரிணாமத்துக்கேற்ப, நம் வாழ்க்கையைப் பற்றிய மதிப்பீடுகளும் (பழக்க வழக்கங்களும்) தொடர்ந்து மறுபரிசீலனைக்கு உட்பட்டாக வேண்டும். அவ்வாறு மாறாமல், எந்தச் சூழ்நிலையில் எந்த வரலாற்று நிப்பந்தத்துக்கிசைய உருவாகியனவோ, அவ்வளவிலேயே அம்மதிப்பீடுகள் உறைந்து இறுகிவிடுகின்றன என்றால், அந்த மரபில் எதேச் சதிகாரமே ஸ்தாபனமாகி விடுகின்றது.

இதை ஆங்கிலத்தில் 'Establishment' என்பார்கள். இந்த 'ஸ்தாபன'த்தை எதிர்த்து, இந்தியச் சிந்தனை வரலாற்றில் கொள்கைப் போர்கள் தொடர்ந்து நிகழ்ந்து வந்திருக்கின்றன.

இந்திய 'லோகாயதம்' (Materialism), பிரஹஸ்பதி லௌக்கிய என்பவர் காலத்திலிருந்து தொடங்குகிறது. இவர் தத்துவ ரீதியாக வைதிக மதத்தை எதிர்த்தார். இவருடைய தொடக்கக்கால எதிர்ப்புக் கணைகளையே அடிக்கற்களாகக்கொண்டு, பிற்காலத்திய லோகாய வாதமும் சார்வாகக் கோட்பாடுகளும் பிறந்தன. பிராம்மண நெறிச் சடங்குகள், இறைவன் பற்றிய கருத்து, பிறவித் தொடர்ச்சி, சரீரத்தினின்றும் வேறுபட்டதாக 'ஆத்மா' என்று ஒன்று இருப்பதாகக் கொள்ளும் நம்பிக்கை அனைத்தும் கேள்விக்குரியனவாகின.

பிரஹஸ்பதி லௌக்கியக் கொள்கைகள் ஒரு காலத்தில் பிரபலமாக இருந்திருக்க வேண்டுமென்று தெரிகிறது. தைத்ரீய பிராஹ்மணம் இதற்குச் சான்று தருகிறது.



ஒரு சமயம் பிரஹஸ்பதி, காயத்ரியின் தலையில் ஓங்கி அடித்தார். தலையும் மூளையும் சுக்கு நூறாகச் சிதறின. ஆனால், காயத்ரி அமரத்வம் வாய்ந்தவள். அவளுடைய மூளையின் ஒவ்வொரு சிறு பகுதியும் அழிவுறாமல் நித்தியமயிருந்தது.

இச்செய்தி எதைக் குறிக்கின்றது?

பிரஹஸ்பதி எதிர்ப்புணர்வின் உருவகம். காயத்ரி வைதிக மதம், அதாவது ஸ்தாபனம். ஸ்தாபனதை அழிக்க முடியாது; புதிய கோலம் பூண்டு அழிக்க முடியாதாகவே இருக்கும், புத்தரை திருமாலின் அவதாரமாக்கியது போல. மேல்கோட்டை சம்பத் குமார் கோயிலில், இராமானுஜர் செய்வித்த ஹரிஜன ஆலயப் பிரவேசம், நாளா வட்டத்தில் ஒரு சமயச் சடங்காக மாறி, ஒடுக்கப்பட்ட மக்கள், ஆண்டுக்கு மூன்று நாட்கள் மட்டும் கோயிலுக்குள் அனுமதிக்கப்பட்டது போல.

மனுவுக்கும் பிரஹஸ்பதிக்கும் நீண்ட சம்வாதம் நிகழ்ந்ததாக மஹாபாரதம் கூறுகிறது. மனுவின் சநாதானக் கொள்கைகளை பிரஹஸ்பதி எதிர்த்துப் பேச, மனு அவரைத் தம் வழிக்குக் கொண்டு வந்ததாகக் கூறும் சம்பவம் இது. அதாவது, ஸ்தாபனத்தின் வெற்றி என்பது பொருள்.

விஷ்ணு புராணம், இவ்வெதிர்ப்பை வேறு வகையாகக் கூறுகிறது. அந்தக் காலத்தில் அசுரர்கள் வேத நெறியை ஏற்றுக்கொண்டு கடுமையாகத் தவம் செய்யத் தொடங்கினார்கள். அதனால், இந்திரன் அச்சம் அடைந்தான். தன் பதவிக்கு ஆபத்து ஏற்பட்டுவிடுமோ என்கிற பயம். ஆகவே, அவன் வேண்டுகோளின்படி, மாயாமோஹன் சிருஷ்டிக்கப்பட்டு, அவன் அசுரர்களுக்கு பிரஹஸ்பதியின் போதனைகளைக் கற்பித்தான். இதன் காரணமாக, அசுரர்களுக்கு எது நல்லது, எது கெட்டது என்று தெரியாமல் போய்விட்டது. அவர்கள் நெறி பிறழ்ந்தார்கள். இந்திரனுக்கு அவர்களை அழிப்பது என்பது எளிதாகிவிட்டது.

பிரஹஸ்பதி, சுக்கிராச்சாரியார் உருவத்தில் அசுர குருவானார் என்று மைத்ராயணி உபநிஷதம் கூறுகின்றது. ஸ்தாபன எதிரியான பிரஹஸ்பதி ஓர் ஏமாற்றுக்காரர் என்பது கருத்து. பைபிளில்





வரும் சாத்தான் கதைகளுக்கும் இதற்கும் பல ஒற்றுமைகளைக் காண முடிகிறது. கடவுளின் இறையாண்மையை எதிர்த்து, மனிதனுக்குத் தேர்ந்தெடுக்கும் உரிமைக்கு வழிகோலிய சாத்தான் தீயச் சக்தியாகச் சித்திரிக்கப்படுகின்றான்.

நெருப்பை (பகுத்தறிவு) உலகிற்குக் கொண்டு வந்த ப்ரொமிதீயஸ் (Prometheous) இறைவனால் தண்டிக்கப்படுகின்றான் என்று கிரேக்கப் புராணங்கள் கூறுகின்றன. ஆங்கிலக் கவிஞனாகிய ஷெல்லி இதைப் பற்றி ஒரு அற்புதமான குறுங்காவியம் படைத்திருக்கிறான். ஆகவே,ஸ்தாபனத்துக்கும் அதை எதிர்ப்பவர்களுக்குமிடையே நிகழும் போராட்டங்கள் மிகத் தொன்மையானவை.

'சார்வாகம்' என்றால், 'இன்பதைத் தரும் பேச்சு' என்று அர்த்தம். தனிமனிதக் கருத்துச் சுதந்திரத்தை அடிப்படையாகக் கொண்ட கோட்பாடு. இவர்களைப் பற்றி விஷ்ணுபுராணம் கூறுகிறது: 'இவர்கள் கண்டதே காட்சி, கொண்டதே கோலம்' என்று இருப்பவர்கள். இவர்களுக்கு நன்மை, தீமை என்று எதுவும் கிடையாது. நிகழ்வன அனைத்தும் எதேச்சை என்பது இவர்கள் கருத்து. இவர்கள் கடவுளை மறுப்பவர்கள். அவனவன் தனக்கு விதித்துக் கொள்வதே தர்மம் என்பதே இவர்கள் கருத்து.

சமூகம்தடம்புரளாமல்இருக்கவேண்டுமென்றால், தனி மனிதனின் கருத்துச் சுதந்திரத்துக்கு வரம்பு தேவையாகின்றது. இன்பத்தைத் தரும் பேச்சு, கவர்ச்சிகரமான போதனைகளாக மாறிச் சிற்றின்பங்களை நுகர்வதில் சமூகத் தடை எதுவும் இருக்கக் கூடாது எனும்போதுதான் பிரச்னைகள் எழுகின்றன.

மனிதன் தன் ஆற்றலின் எல்லை வரம்புக்கு உட்பட்டது என்று உணர்வதுதான், இறை உணர்வு ஏற்படுவதற்கான அடிநாதம். கடவுளை ஏற்றுக்கொள்ளாத எந்தக் கோட்பாடும் இந்தியாவில் வெற்றி அடைந்ததில்லை. சார்வாக மதத்தின் வீழ்ச்சிக்கும் இதுவே காரணம்.

கடவுள் எதிர்ப்புக் கொள்கையை வற்புறுத்திய சார்வாகரையும், சார்வாக முனிவராகக் கொண்டதுதான், இந்தியத் தத்துவ மரபின் தனித் தன்மை. ஆகவே, சம்ஸ்கிருதம் என்றதுமே, அதை சநாதன மதத்தோடு மட்டும் இணைத்துப் பார்ப்பது கொச்சைத்தனமான அணுகுமுறை.

ஸ்தாபனமாக இறுகத் தொடங்கிய எந்தக் கருத்துத்தளத்தையும் எதிர்த்தக் கோட்பாடுகள் சமஸ்கிருத மொழியில் எழுதப்பட்டிருக்கின்றன. சம்ஸ்கிருத மொழியில் நல்ல தேர்ச்சிப் பெற்றிருந்ததினால்தான் கௌதம புத்தர், ஜாபாலி முனிவரிலிருந்து அம்பேத்கார் வரை அனைத்து அறிஞர்களாலும் ஸ்தாபனத்தின் மீது அறிவு சார்ந்த போர் தொடுக்க முடிந்திருக்கிறது.





தமிழும் சம்ஸ்கிருதமும் இந்தியாவின் ஆதி மொழிகள். சம்ஸ்கிருதம் ஒரு குறிப்பிட்ட இனத்தின் தாய் மொழியாகக் குறிப்பிடப்பட்டது ஐரோப்பியப் பாதிரிகள் உருவாக்கிய கற்பிதம். அது எந்தக் காலத்திலும் மக்களிடையே வழங்கிய பேச்சு மொழியாக அறியப்படவில்லை. தமிழ், பிராக்கிருதம், பாலி ஆகியவைதான் மக்களிடையே வழங்கிய பேச்சு மொழிகள்.

அறிஞர்களுக்கிடையே கருத்துப் பரிமாற்றத் துக்காகச் 'செய்யப்பட்ட மொழி' ('சம்ஸ்கிருதம்' என்றாலே 'செய்யப்பட்டது' என்றுதான் அர்த்தம்) சம்ஸ்கிருதம்.

இந்தியத் தத்துவ வரலாற்றைப் பார்க்கும்போது, தத்துவப் போர்களை நிகழ்த்தியவர்களில் பெரும் பான்மையோர் தென்னாட்டைச் சேர்ந்தவர்கள்.

கருத்துக்களை சொல்வதற்கான ஓர் இயல்பான வசதி, இந்தியப் பூர்வீக மொழிகளோடு ஏற்பட்ட தொடர்பினால், சம்ஸ்கிருதத்தில் ஏற்பட்டுவிட்ட காரணத்தினால், தத்துவ ரீதியான விவாதங்கள், இம்மொழியில் அகில இந்திய ரீதியாக அக்காலத்தில் நிகழ்ந்து வந்திருக்கின்றன. அந்தத் தத்துவ ஞானிகளை இனவழியாகவோ ஜாதி வழியாகவோ கண்டறிய முயல்வது அறிவீனம்.

இந்தியக் கலாசார மரபில் கருத்துக்களுக்கும் படைப்புக்களுக்குந்தான் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டதேயன்றி, அவற்றின் ஆசிரியர்களைப் பற்றிய வரலாற்று ரீதியான அக்கறை இருந்ததாகத் தெரியவில்லை. உபநிஷதங்களின் ஆசிரியர்கள் யாரென்று வரையறுத்துக் கூற முடியுமா? ஆசிரியர் பெயர் தெரியாத நூல்களுக்கெல்லாம் வியாஸர், அகத்தியர் பெயர்களை வழங்கிவிட்டார்கள் என்று நினைக்க வேண்டியிருக்கிறது!

பதினெட்டு மஹாபுராணங்களில் பெரும் பான்மையானவை தென்னாட்டில்தான் உருவாகி யிருக்க வேண்டுமென்பது அறிஞர் கருத்து. புராணச் செய்திகள், பக்தி இயக்கத்தின் போது, பன்னிருத் திருமுறைகளிலும் திவ்யப் பிரபந்தத்திலும் வருவன போல், அக்காலக் கட்டத்தில் வடநாட்டின் வட்டார மொழிகளில் எந்த மொழியிலும் வழங்கப் பெறவில்லை என்பது வரலாற்று உண்மை.

தனி மனிதனைச் சமூகத்தோடு இணைத்தது பக்தி இயக்கம். 'நான் அதுவாக இருக்கிறேன்' ('தத்துவமஸி') என்பதைக் காட்டிலும் 'அது'வை 'மனிதனா'கக் (அவதாரம்) கண்டு, மனிதத்தைத் தெய்வீக நிலைக்கு உயர்த்த முயன்றது பக்தி இயக்கம். 'மானுடம் வென்றதமா' என்கிறான் கம்பன். 'மனித்தப் பிறவியும் வேண்டுவதே இம்மாநிலத்தே' என்கிறர் அப்பர்.

இவ்வரலாற்று உண்மைகளைச் சரிவரப் புரிந்துகொண்டால், அவையே நம் பண்பாட்டு அடையாளங்களை அறிவதற்கும் உதவும்.

**இந்திரா பார்த்தசாரதி**
<parthasarathyindira@gmail.com>


SRI VEERA'S GROUP
SRI VEERA'S CREATIONS
பல ஜவுளி கடை முதலாளிகளை உருவாக்கும் ஸ்தாபனம்
ஸ்ரீ வீராஸ் கிரியேஷன்ஸ்
SRI VEERA'S CREATIONS
(Silks Textiles & Readymade Showroom)
மொத்த விலை ஷோரூம்
Wholesale showroom
www.sriveeras.com
www.facebook.com/sriveerascreations
2 Wheeler & Car Parking வசதியுடன்
எண். 51-52/1, M.C. ரோடு, சென்னை - 600 021.
போன் : 2590 1771, 2590 1772, 2590 1773, 2590 1774

# சாரா கேன்
# துருப்பிழத்த எல்லைகளை தூக்கி எறிந்த ஆளுமை

**ஸிந்துஜா**

சாராவின் ஒரு நாடகம் - பெத்ராவின் காதல் - என்னை வெகுவாக அச்சுறுத்திவிட்டது. அச்சுறுத்தும் அளவு அதில் என்ன இருந்தது என்று கேட்கலாம். ஒவ்வொரு பக்கத்திலும் இருந்து சீறி வந்த ஆக்ரோஷம். பக்கமே ஆக்ரோஷமாக உருவெடுத்திருந்தது. அதைத் திருப்புவதும் ஆக்ரோஷம் நிரம்பிய செயலாகிவிட்டது. சாரா கேன் உடையற்று நின்றாள், அவளது பூச்சுக்களற்ற படைப்பைப் போல. மறைக்கும் தோல் எதுவும் அவளிடம் இருக்கவில்லை.

- ஹெரால்டு பின்டர்

*நாடகம் ஆரம்பித்து இருபது நிமிஷங்களுக்குள் எந்தவித முன்னெச்சரிக்கையும் இன்றித் தூக்கி வாரிப்போடும் அந்தக் காட்சி ஆரம்பிக்கிறது. நாடகப் பிரதியில் எழுதப்பட்டது போல, 'டிங்கர் ஒரு பெரிய கத்தியைக் கையில் எடுத்துக்கொண்டு கார்லின் நாக்கை வெட்டிப் போட்டான். எந்தவித சத்தமுமின்றி கார்ல் விடை கொடுப்பது போலக் கையை அசைத்தான். திறந்த வாய் வழியே ரத்தம் சீறிப் பாய்ந்தது.'*

*நாடகத்தின் ப்ரி-வியூ பார்க்க வந்திருந்த சிறிய கூட்டத்தில் அப்போது சிறிய சலசலப்பு ஏற்பட்டது. பார்வையாளர் ஒருவர் மயக்கம் போட்டு விழுந்துவிட, நாடகம் நடத்துபவர்கள் விரைந்து அவரை மருத்துவமனைக்கு அழைத்துச் சென்றார்கள். இந்த நாடகம் மேடையேறுவதற்கு முன்னால் பல நாள்கள் நடந்த பயிற்சிப் பட்டறையில் ஐந்து பேர் இம்மாதிரி மயக்கம் போட்டு விழுந்தனர். சுமார் நாற்பது பேர் தாங்க முடியாமல் பாதி நாடகத்தில் எழுந்து போய்விட்டார்கள்.*

*சாரா கேன் என்னும் 27 வயது நாடக ஆசிரியையின் 'கழுவுதல்' என்னும் நாடகம் ஏற்படுத்திய அனுபவங்கள் இவை. நாக்கை அறுக்கும் காட்சி மட்டுமல்ல, ஒரு பெரிய இரும்புக் கம்பியை ஆசனத் துவாரத்தில் சொருகுவது, தகாத உறவுமுறைப் புணர்ச்சி, மின் பாய்வு, கற்பழிப்பு, பாலுறவு உறுப்புகளின் மீதான அறுவை சிகிச்சையென்று அதிர்ச்சியூட்டும் நிகழ்வுகளையும் வசனங்களையும் அடங்கியிருந்த அந்த நாடகம் பார்வையாளர்களை அதிர்ச்சிக்குள் ஆழ்த்தின.*



*இதை எழுதியது ஒரு பெண் என்பதைப் பலராலும் ஜீரணிக்க முடியவில்லை. இந்த மயக்கமடைவது, அதிர்ச்சியுறுவது ஆகிய செயல்களுக்குப் பின்னால் ஒருவர் தீர்மானிக்க வேண்டியது, - வன்முறை, செக்ஸ் போன்ற கோட்டாலைகளைக் கண்டும், அவற்றில் பொதிந்திருக்கும் அச்சமூட்டும் இருட்டைக் கண்டும், காணாதது போல் ஒருவர் போக வேண்டுமா என்பதுதான் சாராவின் கட்சியாக இருந்தது.*

*'கழுவுதல்', சாரா கேனின் மூன்றாவது நாடகம். பல்கலைக்கழக வளாகமொன்றில் இக்கதை நடக்கிறது. புகழ்பெற்ற பிரெஞ்சுக் கட்டுரையாளரான ரோலண்ட் பார்த்ஸின், 'காதலில் வீழ்வது என்பது வதை முகாமை நாடிச் சென்று தங்குவதற்கு ஒப்பாகும்' என்ற கருத்து தன்னை வெகுவாகக் கவர்ந்ததன் விளைவாக இந்த நாடகத்தை எழுதியதாக சாரா கேன் சொன்னார்.*

*சாரா கேனின் முதல் நாடகமான*



சாரா கேன்

'தகர்த்தல்' அவர் மாணவியாக இருந்த போது எழுதியது. 1995இல் அது முதல்முறையாக அரங்கேறிய போது நாடகத்தில் வந்த இடையறாத வன்முறைக்காட்சிகள் பார்வையாளர்களிடம் மிகுந்த கொந்தளிப்பை எழுப்பியது. "இம்மாதிரி வன்முறை நிரம்பிய நாடகம் பொதுவாக ஆங்கில வரலாற்றில் இருந்ததில்லை" என்று 'ரேடியோ 4' ஒளிபரப்பில் இயக்குநர் கேட்டி மிஷல் கூறினார். 'டெய்லி மெயில்' நாடக விமரிசகரான ஜாக் டிங்கர், "இது குமட்டலை ஏற்படுத்தும் ஒரு சீழ் பிடித்த நாடகம்" என்றார்.

பெரும் வணிகப் பத்திரிகைகளும் சிற்றிதழ்களும் இம்மாதிரி நாடகத்தை ஆதரிக்கக் கூடாது என்று சூடான விவாதங்களை எழுப்பின. ஆனால், இந்நாடகத்தை அரங்கேற்றிய 'ராயல் கோர்ட் தியேட்டர்' இந்த சலசலப்புகளுக்கு எல்லாம் அஞ்சாமல் சாராவை ஊக்குவித்தது. பின்னொரு நாளில் இந்த நாடகம் நியூயார்க்கில் அரங்கேறிய போது, "கடந்த பத்தாண்டுகளில் பெரும் பிரமிப்பை ஏற்படுத்திய நாடகம்" என்று நியூயார்க் டைம்ஸ் புகழ்ந்தது. பல்வேறு விமர்சகர்களின் எதிர்ப்புக் குரல்களை மீறி சாரா, சமூகத்தின் மிக முக்கியமான கலைஞர் என்னும் பேரைப் பெற்றார். அங்கீகரிக்கப்பட்ட மரபுகளை எதிர்த்து எழுந்த உரத்த குரல்களில் (IN -YER-FACE) ஒன்றாக சாரா கருதப்பட்டார்.

இயான் என்பவன் தங்குகிறான். அவன், அவள் உடல் மீது செலுத்த முயற்சிக்கும் செயலை அவள் எதிர்க்கிறாள். அவன், அவளை பாலியல் பலாத்காரம் செய்கிறான். நாடகம் இருட்டான பகுதிகளுக்கு எடுத்துச் செல்லப்படுகிறது. யுத்தகளத்துக்கு நிகரான வன்முறைப் புணர்வு, கற்பழிப்பு, நரமாமிசம் உண்பது என்னும் எல்லைகளுக்குள் படர்ந்து செல்கிறது.

'தகர்த்தல்' பார்வையாளர்கள் முன் வைக்கும் செய்தி - யுத்தத்தில் மட்டுமல்ல, நமது சாதாரண வாழ்க்கையிலும் அட்டூழியங்களும் அநியாயங்களும் நடந்த வண்ணமாய் இருக்கின்றன; இவற்றின் இயங்குதளம் ஆணின் கைகளுக்குள் இருக்கிறது என்பதைத்தான்.

புகழ்பெற்ற ஆங்கில நாடக ஆசிரியர்களான ஹெரால்ட் பின்டர் , கேரில் சர்ச்சில் ஆகியோரின் பாராட்டுகளை இந்நாடகம் பெற்றது. இந்த நாடகத்தை எதிர்த்தவர்கள் பின்னாட்களில் ஆதரவுக் குரல்களை அளித்தார்கள். 'தி கார்டியன்' பத்திரிகையின் நாடக விமரிசகரான மைக்கேல் பில்லிங்டன், "ஐந்து வருடங்களுக்கு முன் நான் சாரா கேனின் இந்த நாடகத்துக்குப் பெரும் எதிர்ப்பைத் தெரிவித்தேன். ஆனால், நேற்றிரவு இந்த நாடகத்தைப் பார்த்த போது அதன் வலிமை எனக்குப் புரிந்தது" என்றார்.

'தகர்த்தல்' நாடகத்தில், ஓட்டல் அறை ஒன்றில் கேட் என்னும் பெண்ணுடன் பத்திரிகையாளனும் ஓரினச் சேர்க்கையாளனுமான

'பெத்ராவின் காதல்' நாடகத்தில் சாரா, ரோமானிய துன்பவியல் நாடகமான செனகாவின் 'பெத்ரா'வை நவீன வாழ்க்கைக்கு



'கழுவுதல்' நாடகத்தில் நாக்கை அறுக்கும் காட்சி

இழுத்து வந்து இன்றைய உலகின் போக்குகளைப் பரிசீலிக்கிறார். மூலக் கதையில் உள்ளது போல இந்நாடகத்தில் பெத்ரா தனது மாற்றாம் புதல்வன் ஹிப்போலிட்டஸ் மீது காதல் கொள்கிறாள். அவனை நெருங்கும் போது அவளை அவன் மறுக்கிறான். ஹிப்போலிட்டஸ் மூலம் அவள் தனது மகளையும் கணவனையும் பற்றி அறியும் போது மனம் உடைகிறாள். தற்கொலை செய்து கொள்ளும்முன் தன் சாவுக்கு ஹிப்போலிட்டஸ்தான் காரணம் என்று சொல்ல அவன் சிறைக்குச் செல்கிறான். சிறையிலிருந்து வெளியே வரும் போது அவனும் அவனது சகோதரியும் அவனது தந்தையாலேயே கொலை செய்யப்படுகிறார்கள். வன்புணர்வும் சாவும் நிரம்பிக் கிடக்கும் இந்த நாடகத்தை, "இது எனது காமெடி நாடகம்" என்றார் சாரா!

நிறுத்த வேண்டியதாயிற்று. அவருக்கு முகத்தின் ஒரு பக்கம் பக்க வாதத்தால் இழுக்கப்பட்டு விட்டது போல ஆகிவிட்டது. நாங்கள் பயந்து விட்டோம், ஏதோ மாரடைப்புதான் என்று. பிறகு டாக்டர் வந்து பார்த்துவிட்டு, "பயப்பட ஒன்றுமில்லை. நாடகப் பிரதி தந்த நெருக்கடி நடிகரின் உணர்ச்சிகளைத் தூண்டி விட்டு ஓவர் ஆக்டிங் செய்துவிட்டதால் இப்படி ஆயிற்று" என்றார். ஆனால், அந்த நிலைமையிலும் பீட்டர் தொடர்ந்து நடிக்க வேண்டும் என்று வற்புறுத்துவதை நிறுத்தவில்லை. இம்மாதிரி நிகழ்ச்சிகள்தான் நாடகத்தில் உணர்ச்சிகளைத் தெளிவாகக் காட்டுவதற்கும் நடிப்பின் உச்சத்தை வெளிப்படுத்துவதற்கும் வழி செய்து பார்வையாளர்களை ஈர்க்கின்றன" என்றார் சாரா.

"ஏங்குதல்' சாராவின் முந்திய நாடகங்களிலிருந்து முற்றிலும் மாறுபட்டதாக அமைந்திருந்தது. வழக்கமான வன்முறை அம்சங்கள் நீங்கியிருந்தன. ஏ, பி, சி, டி என்னும் நான்கு பாத்திரங்களைச் சுற்றி எழுப்பப்பட்ட இந்நாடகத்தை சாரா 'மேரி கெல்விடன்' என்னும் புனைப்பெயரில் வெளியிட்டார். நாடகம் உடல் வன்முறை சித்தரிப்புகளைத் தவிர்த்து, உணர்ச்சிகளால் கவ்வப்பட்ட மனித மன நிலைகளை சித்தரித்தது.

இந்த நாடகத்தைப் பற்றிப் பேசுகையில் சாரா குறிப்பிட்ட ஒரு சம்பவத்தை நினைவு கூர்ந்தார். "நாடக ரிகர்சலின் போது பீட்டர் ஹிக்கி நடிப்பதைத் திடீரென

சாராவின் கடைசி நாடகமான '4.48 - மனச்சிதைவு' அவர் இறப்பதற்கு சற்று முன்பாக எழுதப்பட்டது. வழக்கத்துக்கு மாறாக முழுமையற்ற தன்மையைச் சித்தரித்த இந்நாடகம் மிகமிகக் குறைந்த பாத்திரங்களையும் குறைவான நடிகர்களையும் கொண்டு உத்திகளற்றும் இருந்தது. 4.48 என்று குறிப்பிடப்படுவது அதிகாலை நேரம் 4.48 மணியை. அந்த அதிகாலை சாரா தன் மனநோயால் பாதிக்கப்பட்டு எழுந்து விடும் நேரம்.

சாரா மன அழுத்தத்தால் வெகுவாகப் பாதிக்கப்பட்டு தனது இருபத்தெட்டாம் வயதில் தற்கொலை செய்துகொண்டார். ●

# நாம் கற்பனை என்று நினைப்பதை யாரோ எங்கோ செயலாக உருக்கொடுக்கிறார்கள்!

**சாரா கேன்**

**நேர்கண்டவர்: டன் ரெபல்லாட்டோ**

**தமிழில்: ஸிந்துஜா**

நீங்கள் எதிர்கொண்ட மிக வன்மையான கண்டனங்களும் தனிநபர் சாடல்களும் வேறு எந்த ஒரு நாடக ஆசிரியருக்கும் நேர்ந்ததாக எனக்குத் தோன்றவில்லை. இதற்குக் காரணம் என்ன?

அவர்களுக்கு வேறு எதுவும் சொல்லத் தோன்றவில்லை, தெரியவில்லை என்று நான் நினைக்கிறேன். படைப்பைப் பற்றி ஒன்றும் சொல்லத் தெரியாத போது படைப்பாளி மீது வந்து விழுகிறார்கள். விட்டால் நடிகர், இயக்குனர் மீதுகூட. 'தகர்த்தல்' நாடகத்துக்கு நிகழ்ந்தது என்ன? (என் மற்ற நாடகங்களுக்கான வெளிப்பாடுகளை இந்நாடகத்தின் விமரிசனங்கள் திரை போட்டு மூடிவிட்டன!) ஒவ்வொருவரும் 'தகர்த்தல்' மீதான விமரிசனத்திலேயே மூழ்கிக் கிடக்கிறார்கள். மைக்கேல் பில்லிங்டன் ('தி கார்டியன்' இதழைச் சேர்ந்தவர்) வேறு எந்த நாடகத்தையும் விமரிசித்ததை விட இந்நாடகத்தைப் பற்றி அதிகமாக எழுதியிருக்கிறார்.

இந்நாடகத்துக்கான பத்திரிகையாளர் சந்திப்பு நிகழ்ந்த அன்றிரவு என்ன நடந்தது? நாடகம் நடக்கத் தேர்ந்தெடுத்த இடம் ஒரு நடமாட்டமில்லாத இடம். கூட்டம் நடக்கவிருந்த கட்டிடத்தில் இருந்த பெரும்பாலோர் நாடகம் நடப்பதை விரும்பவில்லை. நடந்த தேதியையும்கூட கிறிஸ்துமஸ்ஸுக்குப் பிறகு என்று வைத்தார்கள். ஏனென்றால், அந்த நாள்களில் நாடக அரங்குகள் பக்கம் மக்கள் வருவதில்லை என்று. கூட்டம் நடந்த இடத்தில் இரண்டு கூட்டங்களுக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஒரு கூட்டம் என்றால் நெரிசல் தாங்க முடியாதென்றும் பத்திரிகையாளர்கள் தவிர மற்றவர்களும் கலந்துகொள்வார்கள் என்பதாலும்.

நான் அரங்க வெளியில் கடைசியில் அமர்ந்து கவனித்துக் கொண்டிருந்தேன். இயக்குநர் முன் வரிசையில். பத்திரிகையாளர்களும் மூன்று பெண்மணிகளும் அங்கு காணப்பட்டனர். வந்திருந்தவர்கள் வெள்ளையர்கள், நடுத்தர வயதினர், நடுத்தர வர்க்கத்தினர்.

அந்த நிமிடத்தில் என் நாடகக் கதாநாயகனும் ஒரு நடுத்தர வயதுப் பத்திரிகையாளன் என்பது என் நினைவுக்கு வந்தது. அவன்தான் அவன்கூடத் தங்கியிருந்த அவனது சினேகிதியை அறைக்குள் வைத்து பாலியல் பலாத்காரம் செய்தவன். அதன்பிறகு தன் உறுப்பையே சிதைத்துக் கொண்டவன். வந்திருந்த பார்வையாளர்கள் இந்த நாடகத்தை ரசிப்பார்கள் என்று எனக்குத் தோன்றவில்லை. மறுநாள் பெரும் ரகளை. என் ஏஜெண்டுக்குப் போன் மேல் போனாகக் கால்கள். சிற்றேடுகள், "எங்கே அவள் படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கிறாளா? பகல் பதினோரு மணிக்கா?" என்று கேட்டுச் சீறி வந்த கேள்விக் கணைகளை ஏஜென்ட் எனக்கு அனுப்பி வைத்தார்.

ஆனால், உண்மையில் நான் செய்ய விரும்பியது என்ன? இதற்கு முன் எவரும் தொடாத ஒரு நாடக உருவத்தைக் கொண்டு வர விரும்பினேன். நான் சொல்ல விரும்பியதெல்லாம், "பாருங்கள், கடந்த இருபது வருஷங்களில் இம்மாதிரி உருவம் கொண்ட



நாடகம் வந்திருக்கவில்லை. இதை நான் உங்கள் முன்னால் வைக்கிறேன்" என்பதுதான். ஆனால், இதுநாள் வரை கண்டிராத ஒரு புது உத்தியை, பார்வையை அவர்கள் அறிய முயலுவதற்குப் பதிலாக அதை ஏற்க மறுப்பவர்களாக ஆகிவிட்டார்கள். மைக்கேல் பில்லிங்டன், "ஆகா இது சிறப்பான நாடக அம்சங்களைக் கொண்டிருக்கிறது' என்றோ, "இது சர்ரியலிசம். எனக்குப் பிடிக்கவில்லை. அதனால் இதை நான் வரவேற்றுப் பார்க்கமாட்டேன்" என்றோ சொல்லியிருந்தால் அதை என்னால் புரிந்துகொள்ள முடியும். ஆனால், "இந்த நாடக ஆசிரியை மனப் பிறழ்வு கொண்டவள். அதனால் அவளைப் பூட்டிய அறையின் உள்ளே வைக்க வேண்டும்" என்றுதான் அவரால் சொல்ல முடிந்திருக்கிறது.

'டெய்லி மெயில்' பத்திரிகை இன்னும் ஒரு படி மேலே போய், "இந்த நாடகத் தயாரிப்புக்கு செலவழிக்கும் பணத்தை வைத்து முதலில் நாடக ஆசிரியைக்கு மருத்துவமனையில் சிகிச்சை தரவேண்டும்" என்று எழுதியது. படைப்பைத் தாக்குகிறோம் என்று படைப்பாளியின் தனிப்பட்ட வாழ்வு, உடல் நிலைமை பற்றி எழுதியது மிகவும் வருத்தத்துக்குரியது.

**உங்களின் எல்லா நாடகங்களின் விமரிசனங்களிலும் ஒரு லிஸ்ட் இருந்தது; என்னென்ன கோரமான காட்சிகள், எத்தனைக் காட்சிகள் என்றெல்லாம்...**

ஆமாம். இந்த லிஸ்ட் என்பதே படு அபத்தம். அவைகள் சுட்டிக் காட்டியதென்ன? "இன்னும் வயதுக்கு வராத மனவளர்ச்சி குன்றிய பெண்ணின் படைப்பு" என்றெல்லாம்தான். நாடகத்தைப் பார்த்தவர்கள் அரைகுறை விமரிசனங்கள் எழுதினார்கள் என்றால், நாடகத்தைப் பார்க்காத அந்த அரை குறை விமரிசனத்தைப் படித்தவர்களும் நாடக விமரிசனம் எழுதினார்கள்! அவர்களுக்கு உண்மையின் தரிசனம் வேண்டியிருக்கவில்லை. பொய்யின், புரட்டின் கனம், செய்தி என்ற பெயரில் வந்தால் போதும்.

இந்த லிஸ்ட் எண்கள் அடங்கியது. உண்மைகளை அல்ல. எனவே, அவை விமரிசனம் ஆகா. இத்தகைய சூழ்நிலை எனக்கென்றில்லை, மற்றவர்களுக்கும் ஏற்படுவதுதான்.

**ஒரு விமரிசகன் தன்னகத்தே கொண்டிருக்க வேண்டிய உள்ளொளி பற்றிய தீர்மான அபிப்பிராயங்களை நீங்கள் கொண்டிருக்கிறீர்கள். ஒரு விமரிசகன் என்பவன் யார்? அவன் எவ்வாறு செயல்புரிய வேண்டும்?**

அவன் சாகக் கிடக்க வேண்டும்! (சிரிப்பு) அல்லது ஏதாவது செய்ய வேண்டும். இது ஒரு நகை முரண். ஒரு நல்ல விமரிசகன் என்பவன் ராணுவ ரகசியங்களைக் காப்பவன், கிறிஸ்துவ விஞ்ஞானி, கலப்படமற்ற காதலன்! எல்லாம் சேர்ந்ததுதான். அநேகமாக பெர்னார்ட் ஷா ஒரு சிறந்த விமரிசகர். அவர் எழுத்தாளரும்கூட. ஒரு நல்ல எழுத்தாளன் நல்ல விமரிசகனாக இருக்க சாத்தியமுண்டு என்று நான் நினைக்கிறேன். விமரிசனம், தான் உறுதியாக நம்பும் செயல் என்று மனப்பூர்வமாக உணராத ஒருவர் எழுதும் போது அவ்வெழுத்து அவர் விரும்பியோ விரும்பாமலோ அடுத்தவரை அழிப்பதில் குறியாயிருக்கிறார் என்பதைச் சுட்டிக்காட்டி விடுகிறது. ஆனால், அதைத் தொடர்ந்து செய்கிறார். அவரே வேறொரு கலை வடிவத்தின் மீது தனது விமரிசன ஆற்றலைச் செலுத்தும் போது தயவு தாட்சண்யம் எல்லாம் பார்க்கின்ற ஒரு முற்றிலும் மாறுபட்ட மனிதராகி விடுகிறார்.

எனக்கு நாடகங்களை விமரிசிப்பது பிடிக்கும். ஒரு முறை 'அப்சர்வர்' இதழில் என்னை ஹெரால்ட் பின்டரின் 'ஆஷஸ் டு ஆஷஸ்' நாடகத்தை விமரிசிக்கும்படிக் கேட்டார்கள். பின்பு அவர்களே போன் செய்து, "அது உங்களுக்கு மிகச் சிறந்த படைப்பாகத் தெரியவில்லை என்று சொன்னால் நல்லது" என்றார்கள். 'சரி, இது ஏதோ செட்டப். இதில் நாம் தலையிட வேண்டியதில்லை' என்று விலகிவிட்டேன். நாடக ஆசிரியர்கள் மற்ற நாடக ஆசிரியர்களின் படைப்புகளை விமரிசிப்பது சுவாரஸ்யமான விஷயம்தான். ஆனால், விமரிசனம் உண்மையாக உளப்பூர்வமாக இருக்க வேண்டும்.

**உலகளவில் விமர்சக சிந்தனைகளின் பண்பாட்டுக் கூறுகளைப் பற்றிய உங்கள் அபிப்பிராயம் என்ன?**

ஜெர்மனியில் என் பல படைப்புகள் தயாரிக்கப்பட்டன. சமீபத்தில் ஒரு பத்திரிகையாளர் கூட்டம் அங்கு நடந்தது. அங்கு வந்தவர்கள் எல்லோரும் என் படைப்புகள் அனைத்தையும் படித்திருந்தார்கள். புத்திசாலித்தனமாகக் கேள்விகளைக் கேட்டார்கள். முரட்டுத்தனமாகவோ கனிவற்றோ யாரும் பேசவில்லை. நாடகங்களைப் பார்க்க அவர்கள் திறந்த மனதுடன் வந்திருந்தார்கள். ஒருவர் தனக்குப் பிடித்த செயலைச் செய்யும் போது காட்டும் ஈடுபாட்டை அவர்கள் என் நாடகங்களை ரசிப்பதில் காட்டினார்கள். இது முற்றிலும் எதிர்பாராத சந்தோஷம் தரும் அனுபவமாக இருந்தது.

நான் வழக்கமாய்ப் பேட்டிகள் தருவதில்லை. அப்படியே தரும்போதும் வருபவர், "நான் உங்கள் நாடகங்களைப் பார்த்ததில்லை" என்று ஆரம்பித்தபடி வருவார். "நீங்கள் ஜெர்மானியர்களைப் பற்றிச் சொல்வதெல்லாம் உண்மையா?" என்று கேட்பார். என்னைப் பொறுத்தவரை, ஜெர்மானிய விமரிசகர்கள் கெட்டிக்காரர்கள். ஆனால், அங்கு தயாரிக்கப்படும் நாடகங்கள் அவ்வளவு உசத்தியில்லை.

அவர்கள் அங்கு என் படைப்புகளில் சில மாற்றங்கள் செய்து நாடகங்களை மேடை ஏற்றியிருந்தார்கள். அவை எனக்குப் பிடித்திருந்தன. பெல்ஜியத்தில் சிறார்கள் மீது முறைகேடடான பாலினத் தாக்குதல் நடத்திய ஒரு கும்பலைப் பற்றி 'பிரெஸ்ஸெல்ஸ்' பத்திரிகைகளில் செய்தி வந்தது. அச்சமயம் இந்த செயலைப் பின்புலமாக வைத்து ஒரு நாடகம் அரங்கேற்றப்பட்டது. பாதிக்கப்பட்ட குழந்தையை அடக்கம் செய்வதாகக் காண்பிக்கும் சமயம் பார்வையாளர்களில் பலரால் அழுகையைக் கட்டுப்படுத்த முடியவில்லை. இது என் இயக்க முறையிலிருந்து முற்றிலும் வேறுபட்ட விதமாகக் கொண்டுவரப் பட்டாலும் அது அவர்களது பண்பாட்டை எதிரொலிக்கிறது என்று நான் ஏற்றுக்கொண்டேன்.

**ராயல் கோர்ட், புஷ் போன்ற தியேட்டர்காரர்களால் உருவாக்கப்பட்ட நாடகங்களில் நேச்சுரலிசம் மேலோங்கி இருக்கும். அவர்கள் எப்படி உங்களை எடுத்துக்கொண்டார்கள்?**

ஆமாம், எனக்கும் ஆச்சரியம் தரும் விஷயம்தான் அது. அவர்களின் தரத்துக்கு என் படைப்புகள் ஈடுதானா என்று என் மனதில் சந்தேகம் இருந்தது. நான் உதவியாளராகப் புஷ் நிறுவனத்தில் சேர்ந்தபோது என் வேலை அங்கு வரும் நாடக ஸ்க்ரிப்டுகளைப் படித்துப் பார்ப்பதுதான். அதில் முக்கால்வாசி குப்பையாக இருக்கும். அவற்றை யாராவது தயாரிக்க முன் வந்திருந்தால் அவை மிகப் பெரிய தோல்வியைச் சந்திக்கும் என்று எழுதித் தரத் தயாராயிருந்தேன். நாடகத்தில் வடிவம் பற்றிய பிரக்ஞை இல்லாமல் எழுதப்பட்ட படைப்புகள் அவை.

சில விஷயங்கள் உங்களை பிடித்துஇழுத்து எழுதச் சொல்லும். உங்களுக்கே சில விஷயங்கள் பற்றி எழுத வேண்டும் என்றிருக்கும். நான் காதலைப் பற்றி எழுத எப்போதும் ஆவல் கொள்கிறேன். ஆனால், இவை எல்லாவற்றுக்கும் பின்புலமாக உங்கள் உள்ளத்தில் நாடகத்தின் வடிவம், உருவம் பற்றிய பிரக்ஞை இருக்க வேண்டும். உருவ நேர்த்தி இல்லாது உருவாக்கப்படும் ஒரு நாடகம் தோல்வியைத்தான் தழுவும். ஒரு புஷ் நாடகம் எப்படி சிறப்பாக அமையும் என்பது எனக்குத் தெளிவாகத் தெரியும். அத்தகைய இமேஜை அவர்கள் உங்களில் உருவாக்கி விடுகிறார்கள்.

'தகர்த்தல்' வந்தபோது பார்வையாளர்களுக்கு



நானும் ராயல் கோர்ட்டும், இரு உயிரற்ற முண்டங்கள் யாருடைய பின்புறத்திலோ தொங்கிக் கொண்டு போவதாகவும், அது கடற்கரையில் நிகழ்வதாகவும், யாருடைய பாலியலையோ ஆராய்வதாகவும், ஒரு கற்பனை தோன்றி இருக்கக்கூடும். இப்படிப்பட்டதையே நாங்கள் நாடகமாக்க விழைந்தோம். இத்தகைய கற்பனையின் கூறும் அதை விரும்பும் நானும் என் நாடகங்களில் இணைந்திருக்கிறோம்.

**ஸ்காட்லாந்து நாடக ஆசிரியர்கள் வித்தியாசமானவர்களாக இருக்கிறார்கள். கிறிஸ் ஹன்னான், டேவிட் க்ரெய்க், டேவிட் ஹர்ரோவர் போன்றவர்கள் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?**

ஓ எனக்கு ஸ்காட்லாந்து மிகவும் பிடிக்கும். 'ஏங்குதல்' முதன்முதலாக 'ட்ராவர்ஸ்' தியேட்டரில் அரங்கேறியது என் வாழ்க்கையில் மிகப் பெரிய நிகழ்வு. நீங்கள் சொன்ன மூவரும் என் விருப்பத்துக்குரிய படைப்பாளிகள். இங்கே லண்டனில் நாடக ஆசிரியர்கள் என்று ஒரு படையே தேசிய அங்கீகாரம் பெறத் துடித்துக்கொண்டு நடமாடுகிறது. இங்குள்ள பத்திரிகை ஊடகமும் நேர்மையான மதிப்பீடுகளுடன் இயங்குவதில்லை. இல்லாவிட்டால் எப்படி டேவிட் க்ரெய்க்கை விட ஜோ பென்ஹால் பிரபலமாக இருக்க முடிகிறது? லண்டன் மிக அதிகமான நாடக ஆசிரியர்கள் என்ற ஜாதியை உருவாக்குகிறது. அவர்களில் முக்கால்வாசிக்கும் மேல் மோசமான படைப்பாளிகள். இன்று தலைசிறந்த மூன்று நாடக ஆசிரியர்கள் ஸ்காட்லாந்தில்தான் இருக்கிறார்கள்! இங்கு லண்டனில் ஏதோ பெரிய கோளாறு இருக்கிறது.

**எப்படி எழுதுகிறீர்கள்?**

எழுதும் விஷயத்தைப் பொறுத்து எழுத்து அமைகிறது. நான் எம்மாதிரி நிலையில் இருக்கிறேன் என்பதைப் பொறுத்தும். எழுத ஆரம்பித்த காலத்தில் மனதில் தோன்றியதை எல்லாம் எழுதி விடுவேன். அவற்றில் குப்பைகளும் இருக்கும். அவற்றில் உருவம் இருந்ததில்லை. 'தகர்த்தல்' என் முதல் படைப்பு என்றாலும் வித்தியாசமாக அமைந்தது. இன்று எழுத்து பற்றி, உருவம் பற்றி இருக்கும் அனுபவ அறிவு அன்றிருக்கவில்லை. உதாரணமாக 'ஏங்குதல்' எழுதும் போதே இரண்டு பக்கம் வருவதற்குள் அதனுடைய வடிவம் எப்படி இருக்க வேண்டும் என்று பிடிபட்டு விட்டது. 'தகர்த்த'லில் அது எனக்குக் கிடைக்க ஆறு மாதங்கள் ஆயின.

'தகர்த்தல்' எழுதிக் கொண்டிருக்கும் போது யதேச்சையாக ஒருநாள் இரவு தொலைக்காட்சியைப் பார்த்தேன். அதில் ஒரு வயதான பெண்மணி, பாஸ்னியாவைச் சேர்ந்தவள், "எங்களைக் காப்பாற்றுங்கள். ஏதாவது செய்து எங்களுக்கு நல்ல வாழ்க்கை கிடைக்க உதவுங்கள்" என்று ஐ.நா. சபையிடம் உருக்கமாக வேண்டுகோள்கள் விடுத்து அழுது கொண்டிருந்தாள். இதற்கு முன்னால் எவ்வளவு பேர் இது மாதிரி கதறியிருக்கிறார்கள்? எவ்வளவு பேருக்கு உதவி கிடைத்தது? யாரும் உதவி செய்யப் போவதில்லை என்று நான் எண்ணினேன். நான் இங்கே 'தகர்த்த'லில் ஓர் ஆணும் பெண்ணும் அறையில் தங்கியிருக்கிறார்கள். அவர்களிருவருக்கும் நடக்கும் சண்டையில் கோபமுற்று அந்த ஆண் அவளை பாலியல் பலாத்காரம் செய்துவிடுகிறான் என்று எழுதிக் கொண்டிருக்கிறேன். அங்கு யுத்தம் நடக்கும் பாஸ்னியாவில் இதே பாலியல் பலாத்கார விஷயம் நடக்கிறது. இரண்டிற்குமான தொடர்பு என்று ஏதோ என்னை அலைக்கழித்தது.

திடீரென்று 'அது விதை; இது மரம்' என்று ஓர் எண்ணம் ஏற்பட்டது. யுத்தம் உருவாக்கும் விதைகள் சமாதானக் காலத்தில் மரங்களாக வியாபித்து விடுகின்றன என்று எனக்குத் தோன்றிற்று. நாகரிகத்துக்கும் யுத்தக் காலத்துக்கும் இடையே உள்ள மெல்லிய சுவரைத் தகர்த்தால் எதையும் யாரையும் சிதைத்துவிட முடியும் என்ற கதை உருவாயிற்று.

'இரண்டு தனி நபர்களுக்குள் அறைக்குள் நடக்கும் பலவந்தத்தை எப்படி வெளியுலகப் பலாத்காரத்தோடு இணைப்பது?' என்ற கேள்வி எனக்குள் எழுந்தது. நான் உடனே டேவிட் க்ரெய்க்குடன் பேசினேன். ஒரு சோக நாடகீயச் செயலின் மூன்று கூறுகள் - நேரம், இடம், செயல் பற்றி அரிஸ்டாட்டில் கூறியதை டேவிட் எனக்கு நினைவுறுத்தினார். எனக்குப் புதிய பாதை கிடைத்ததை போல உணர்ந்தேன். இடத்தை மட்டும் மாற்றாமல் வைத்துக்கொண்டு மற்ற இரண்டையும் நேரம், செயல் மாற்றி எழுத முடியும் என்று தீர்மானித்தேன்.

அப்போது எனக்குள், இதற்கு ஏதாவது முன்னோடி உண்டா என்று கேள்வி எழுந்தது. இம்மாதிரி வேறு யாராவது செய்திருந்தால் அதைப் பின்பற்ற எனக்கு விருப்பமில்லை. ஆனால், அம்மாதிரி இல்லை என்று அறிந்ததும் நாடகத்தில் வேண்டிய மாறுதல்களை என் விருப்பத்திற்கேற்ப செய்து முடித்தேன்.

'தகர்த்தல்' எழுதும் போது முன்னேற்பாடாக எதையும் நான் செய்யவில்லை. ஆனால், அதற்குப் பின் வந்த படைப்புகளைப் பொறுத்தவரை, அவற்றுக்கான ஆதாரங்களை எழுதுவதற்கு முன் திரட்டி வைத்துக் கொண்டேன்.

'கழுவுதல்' இன்னொரு விதமான அனுபவம். நான் சொல்வதைப் பலர் நம்பாமல் போகக் கூடும். ஆனால், அதுதான் நடந்தது. யதார்த்தம் என்று சொல்லிக்கொண்டு வரும் நூற்றுக்கணக்கான படைப்புகள் என்னை ஈர்க்கவில்லை. எனவே, நான் எடுத்தாளப் போகும் கதை ஒரு நாவலாகவோ டிவி. தொடராகவோ சினிமாவாகவோ எடுக்கப்பட முடியாததாகஇருக்கவேண்டும்என்றுதீர்மானித்தேன். 'கழுவுதல்' ஒரு நாடகமாகத்தான் விளங்கும். அதற்கு வேறுவிதமான வழிகள் சாத்தியமில்லை. என்னுடைய இந்த நிலைப்பாட்டை நீங்கள் ஒப்புக்கொள்ளாமல் இருக்கலாம். மக்கள் விரும்பும் யதார்த்தப் பூர்வமான படைப்பாக அது இருக்க சாத்தியமில்லை. கால்களை வெட்ட வேண்டுமென்றோ, அவற்றை நிஜ எலிகள் இழுத்துச் செல்ல வேண்டுமென்றோ நான் நிர்ப்பந்திக்கவில்லை. ஒரு காட்சி எந்த மாதிரி பாதிப்பை ஏற்படுத்த வேண்டும் என்பது என் கையில் இருக்கிறது. ஆனால், அதைத் திறம்படச் செய்வது என்பதை நாடக இயக்குநரும் மேடை நிர்வாகியும் தீர்மானிக்கிறார்கள்.

**'கழுவுத'லில் நீங்கள் நடித்திருக்கிறீர்களே!**

நான் அதில் நடிக்கும் நடிகையை மாடியிலிருந்து கீழே தள்ளி விட்டுவிட்டு அந்தப் பாத்திரத்தில் நடித்தேன் என்று ஏகப்பட்ட வதந்திகள். உண்மையில் அந்த நடிகையின் நாய் அங்கிருந்த மற்றொரு நாயின் மேல் காதல் செய்யத் தொடங்கிற்று. அதைத் தடுத்து இழுக்கும் போது நடிகை பேலன்ஸ் தவறிக் கீழே விழுந்துவிட்டார்.

**இதுதான் சாரா கேன் என்பது! (சிரிக்கிறார்)**

இருக்கலாம்! நடிகைக்கு ஸ்லிப் டிஸ்க் ஏற்பட்டு விட்டதால் நடிக்க முடியாத நிலைமை ஏற்பட்டுவிட்டது. எனக்கோ தயாரிப்பை நிறுத்தி வைக்க மனமில்லை. கதையும் வசனங்களும் எனக்குள் ஊறிக் கிடந்ததால் நானே நடிக்க முன்வந்தேன். நான் நடிக்க வேண்டும் என்று நடிகைகளைக் கீழே தள்ளி விடுவதில்லை.

**நடிக்கும் போது அது உங்கள் எழுத்துக்கான படிப்பினைகள் என்று ஏதாவது தந்ததா?**

நிறைய. நடிப்பு என்பது எவ்வளவு கஷ்டம் என்பதையும் எவ்வளவு சுலபம் என்பதையும் கற்றுக்கொண்டேன்! ஒவ்வொருவரும் அதைக் கஷ்டமான செயலாக மாற்ற முயற்சிக்கிறார்கள். அது அப்படியில்லை. உண்மையில் அது மிக மிக எளிதான காரியம். அதனுடைய எளிமைதான் அதைக் கஷ்டமாகக் காண்பிக்கிறது. நான் நடிப்பைப் பற்றி முழுவதுமாகப் பேச முடியாது. ஆனால், 'கழுவுதல்' நடிப்பின் எளிமைத் தன்மையைப் புரிந்துகொள்ள வாய்ப்பளித்தது. நானூறு மக்களுக்கு முன் உடம்பில் ஒரு துணி இல்லாமல் நிற்பது மிக மிகக் கஷ்டமான காரியம் என்று தோன்றலாம். உங்கள் உள்ளுணர்வு ஓடிப்போ என்று அதட்டும். ஆனால், அது மிகவும்



எளிதான செயல். நான் விரும்புவதென்ன? நான் உணர்வது என்ன? அவ்வாறு என்னால் எவ்வாறு உணர முடிகிறது? ‘கழுவுத’லில் நான் ஒரு சுவற்று ஓட்டை வழியே வெளியே போகிறேன். மூன்றரை நொடியில் எல்லா உடைகளையும் களைந்தாக வேண்டும். மேடையின் பின்புறத்தைச் சுற்றி வந்து மாற்று சுவற்று ஓட்டை வழியே உள்ளே வர வேண்டும்.

பார்வையாளர்கள் அப்போது கூச்சலிட்டார்கள்.

*நீங்கள் அப்போது அங்கு இருந்தீர்களா?*

இல்லை. அவர்கள்...

*உண்மைதான். ஒரே கூச்சல்.*

### யாருக்காக எழுதுகிறீர்கள்?

*எனக்காக. என்னைத் தவிர வேறு யாருக்காகவும் இல்லை. நரகத்திலிருந்து விடுபட எனக்கு எழுத்து தேவையாக இருக்கிறது. ஆனால், அது கூட முற்றிலும் சாத்தியப்படாததாகவே இருக்கிறது. ஒரே ஒரு தடவை என் தந்தைக்காக ஒரு காமெடி நாடகம் எழுதினேன். அதைத் தவிர வேறு யாருக்காகவும் நான் எழுதியதில்லை.*

### பார்வையாளர்கள் எப்படி ரியாக்ட் செய்ய வேண்டும் என்று எதிர்பார்ப்பதுண்டா?

*‘தகர்த்தல்’ நாடகத்தை அவர்கள் விரும்புவார்கள் என்று நினைத்தேன். ஆனால், பெரும்பாலும் வெறுப்பைக் காண்பிப்பவர்களைச் சந்திப்பதில் அது முடிந்தது. நான் எழுதி முடித்து ரிகர்சல் எல்லாம் முடிந்த பிறகு பார்வையாளர்களின் எதிர்பார்ப்பை நான் நினைத்துப் பார்ப்பதுண்டு, நாம் எதிர்பார்ப்பது எப்போதும் கை கூடுவதில்லை, இது பெரும்பாலானவர்களுக்கும் பொருந்தும். அதனால், நான் எழுதும் போது ஒரு குறிப்பிட்ட தருணம் அல்லது ஐடியா என்னைத் தாக்கினால் நான் சொல்ல விரும்புவது என்ன என்பது எனக்குப் பிடிபட்டு விடும். நாடகம் காண வருபவரில் ஒருவராவது என்னைப் போன்றே உணர்வார் என்னும் நம்பிக்கை எனக்கு உண்டு.*

### நீங்கள் மட்டுமீறிய விஷயங்களை எடுத்தாள்வதே மற்றவர்கள் பொங்கி எழட்டும் என்பதற்காகத்தானா?

*என் மட்டுமீறிய எழுத்துக்கள் என்று நீங்கள் குறிப்பிடுவற்றை எழுதுவதன் மூலம் நான் உண்மைகளைச் சொல்ல விரும்புகிறேன். அவை உண்மை என்பதால் அவற்றால் தாக்கப்பட்டவரின் மனநிலை எப்படி இருக்கிறது? அது கிலேசத்தையும் நடுக்கத்தையும் எரிச்சலையும் பார்ப்பவரிடத்தில் எழுப்பலாம். ஆனால், அதற்காக நான் உண்மையை எழுதுவதை என்னால் தவிர்க்க முடியாது.*

'தகர்த்த'லில் வரும் வன்முறைக் காட்சிகள் தவிர்க்கப்பட முடியாதவை. பில் புஃபோர்டின், 'அமங் தி தக்ஸ்' கட்டுரைத் தொகுப்பில் ஒரு காட்சி இடம்பெறும். இந்தக் கட்டுரைத் தொகுப்பே வன்முறை நிகழ்ச்சிகளைப் பற்றிய விமரிசன நூல்தான். கால்பந்தாட்ட மைதானத்தில் ஒரு போலீஸ்காரன் இங்கிலாந்து கால்பந்து அணியைச் சேர்ந்தவனாக வேஷமிட்டு வருபவன், திடீரென்று எதிராளி கால்பந்தாட்டக்காரனின் கண்களைக் கடித்துத் தரையில் துப்பிவிட்டு அவனைக் கீழே போட்டுத் துவைப்பான். பிறகு எதுவுமே நடக்காதது போல அங்கிருந்து போய்விடுவான். இதை படித்துக்கொண்டு வரும்போது இப்படியெல்லாம் ஒரு மனிதனால் நடந்துகொள்ள முடியுமா என்று எனக்கு அதிர்ச்சியாக இருந்தது. ஆனால், அது ஒரு உண்மைச் சம்பவம். 'தகர்த்தல்' ரிகர்சலின் போது நான் எழுதிய காட்சிகளைக் கண்டு அதிர்ந்தவர்கள் ஏராளம்.

**உங்களிடம் இரண்டு கேள்விகள். 'ஏங்குதல்' நாடகத்தில் பாத்திரங்களின் பால்வகை (Gender) பற்றி?**

என்னைப் பொறுத்தவரை 'ஏ' வயதான மனிதன், 'பி' வயதான பெண்மணி. 'சி' இளைஞன், 'டி' யுவதி. பாத்திரங்கள் அவர்களைத் தாங்களே உணர்த்திக்கொள்ளட்டும் என்பதால் இம்மாதிரியெல்லாம் நான் குறிப்பிட்டுச் சொல்வதில்லை. 'ஏங்குத'லில் உங்களை அவஸ்தைப்படுத்தும் காட்சிகள் உண்டு. ஒரு மனிதன், "நான் இன்று எழுந்திருக்கும் போது எனக்கு மாதவிலக்கு ஏற்பட்டது" என்றோ; அவன், "நான் ஒரு குழந்தை பெற்றுக்கொள்ள வேண்டும்" என்றோ கூறுவது பொதுவாக விநோதமானதாகக் கருதப்படும். ஆனால், இது மாதிரி நடக்கக்கூடும் என்று சொல்லிக்கொண்டு ஒரு ஜெர்மனி நாடகத் தயாரிப்பாளர் என்னைத் தேடி வர சாத்தியமிருக்கிறது! (சிரிப்பு)

'ஏங்குத'லில் எனக்கென்று பிரத்தியேகமான அர்த்தங்கள் உள்ளன. உங்களில் யாரும் அதை அறிய முடியாது. அவற்றைச் சொல்லி விவரிக்கும் உத்தேசமும் எனக்கில்லை. இந்த ஏ, பி, சி, டி, யார் வேண்டுமானாலும் இருக்கலாம். அதை உங்கள் இஷ்டப்படி தீர்மானித்துக் கொள்ளுங்கள். ஆனால், டி.எஸ்.எலியட் போல 'வேஸ்ட் லேண்டு'க்கு நோட்ஸ் எழுத மாட்டேன். 'வேஸ்ட் லேண்டை'ப் படிக்கக் கையில் எடுத்தவர்கள் கவிதையைப் படிப்பதற்குப் பதிலாக நோட்ஸ் படிப்பதில் மும்முரமாகி விட்டார்கள். உண்மையில் நோட்ஸ் கவிதையை விட நீளமாக இருந்தது பரிதாபம். ஒன்று நான் விளக்கங்கள் தர வேண்டும்; அது என் வாழ்க்கையை விளக்கமாகச் சொல்லிக்கொண்டே போவது; அல்லது பேசாமலிருக்க வேண்டும். நான் இரண்டாவதைத் தேர்ந்தெடுத்தேன். இதனால் என் படைப்பு யாருக்கும் பிடிக்கவில்லையா? ரொம்ப நல்லதாகப் போயிற்று.

**'கழுவுதல்' நாடகத்தில் ஒருவனின் ஆசன வாயில் இரும்புக் கம்பி சொருகப்பட்டு அது தோள் வழியாக வரும். அதை பார்த்ததும் நடுங்கிவிட்டேன். இது உண்மையா கற்பனையா?**

உண்மைதான். பாஸ்னியாவில் செர்பிய ராணுவத்தினர் முஸ்லிம்களை இம்மாதிரிதான் கழுவேற்றியிருக்கிறார்கள். நூற்றுக்கணக்கான முஸ்லிம்களைப் பிடித்து இம்மாதிரி கம்பியைச் சொருகி தலை கீழாகத் தொங்கவிட்டார்கள். நாலைந்து நாள்கள் பொறுக்க முடியாத வலியில் துடித்து அவர்கள் இறந்து போனார்கள். மிகவும் துரதிர்ஷ்டமான மரணங்கள் அவை. நாம் கற்பனை என்று நினைப்பதை யாரோ எங்கோ செயலாக உருக்கொடுக்கிறார்கள் என்பதுதான் உண்மை.

**இரண்டாம் கேள்வி. திரைப்படங்கள் பற்றி?**

நான் நாடகங்கள் எழுதுகிறேன். திரைப்படங்களுக்கு நான் எழுதியதில்லை. எனக்கு சினிமா அவ்வளவாகப் பிடிக்காது. நான் டாரண்டினாவின் திரைப்படங்களை எண்ணிப் பார்க்கிறேன். அவரது படங்களில் வன்முறை கிடையாது. காதலைப் பற்றியும் அவர் படங்கள் எடுத்ததில்லை. திரைப்படங்களைப் பற்றிய திரைப்படங்களை அவர் இயக்குகிறார். மற்றவர்களின் படங்களை, சரித்திரப் படங்களைக் குறிப்பெடுத்து இயக்குகிறார். நான் அப்படியில்லை, மற்றவர் நாடகங்களைப் பற்றி நான் கவலைப்படுவதில்லை. என் படைப்புகள் யாருடைய படைப்பையும் பிரதி எடுப்பதில்லை. காதலைப் பற்றிப் படைப்பது எனக்கு மிகவும் இஷ்டம். நிர்வாணக் காட்சிகள் பற்றிக் குற்றம்சொல்ல என்னிடம் ஏதுமில்லை. அது கதையுடன் ஒத்துப்போகிறதா என்றுதான் பார்க்கிறேன். நாம் பேசும் பொருளோ சந்திக்கும் தருணமோ அவை எப்போதும் உண்மையுடன் கைகுலுக்க வேண்டும்.

**உங்கள் படைப்பு, நாடகங்கள் இவற்றின் மீதான எதிர்காலம் பற்றி?**

எல்லாவற்றையும் இழுத்து மூடி விடுவார்கள்! இல்லை, எனக்குத் தெரியவில்லை. நான் ஒரு எதிர்மறைப் பாதிப்பை ஏற்படுத்துபவளாக என்னை நினைக்கிறேன். 'தகர்த்தல்' வெளியான இரு வாரங்கள் கழித்து 'ராயல் கோர்ட்' என்னிடம் ஒரு படைப்பைக் கொடுத்தார்கள். அதில் கட்டிடத்தின் அடித்தளப் பகுதியில் மூன்று பேர் ஒரு மனிதனை சுட்டுக் தின்கிறார்கள். இதை எழுதிய ஆள் 'தகர்த்த'லைப் பார்த்திருப்பானோ என்று எனக்கு ஆச்சரியம் உண்டாயிற்று. என் நாடக வரிகளும் அதில் காணப்பட்டன. இது எதிர்மறைப் பாதிப்பில்லாமல் வேறென்ன?

நேர்மறைப் பாதிப்பு என்று கூற வேண்டுமானால்



நேச்சுரலிசம் என்று நான் கருதும் நெருடலான சமாச்சாரத்தை இப்போது நாடகங்களில் விலக்கி வைக்கிறார்கள் என்று கேள்விப்பட்டேன். சமீபத்தில் நிக் கிராஸ்ஸோ தயாரித்த நாடகம் இயற்கையியல் என்னும் வாதத்தை முற்றிலும் நிராகரித்து எழுதப்பட்டிருக்கிறது என்று சொன்னார்கள். இது பெரிய விஷயம். நாம் எழுதுவது ஐம்பது வருஷங்களுக்குப் பின்னும் நிற்குமா? நாமே ஐம்பது வருஷங்கள் இருப்போமா? இதுதான் கேள்வி.

சாவுக்குப் பின் வாழ்வு என்கிறார்கள். என் மறைவுக்குப் பின் என் படைப்புகளுக்கு என்ன ஆகப் போகிறது என்று நான் அறியப் போவதில்லை. நல்ல நாடகங்கள் எதிர்காலத்திலும் எழுதப்படும் என்பது என் நம்பிக்கை. இப்போது குப்பைகள் அதிக அளவில் வருகின்றன. சாதாரணத்துக்குக் கீழானவை புகழப்படுகின்றன. ஆனால், இது காலங்காலமாக நடந்து வருவது. பெரும்பாலான நல்ல நாடகங்கள் பின்னோக்கிய பார்வையில்தான் அவற்றுக்கு உரிய இடத்தைப் பெறுகின்றன என்பதுதான் உண்மை.

நாங்கள் ராயல் கோர்ட்டில் 'கழுவுதல்' நாடகத்தை செய்து கொண்டிருந்த ஒரு நாளில் குறைந்த எண்ணிக்கையில் பார்வையாளர்கள் எங்கள் நாடகங்களைப் பார்க்க வருவது குறித்துப் பேச்சு எழுந்தது. அப்போது ஒரு டி.வி.யில் வந்த ஒரு காட்சி காண்பிக்கப்பட்டது. 'சார்ஜெண்ட் மஸ்க்ரேவ்ஸ் டான்ஸ்' என்ற நாடகத்திலிருந்து. அதில் நடிக்கும் ஒரு நடிகன் சொல்வான்: "எனக்குப் புரியவில்லை. இது ஒரு மிகச் சிறப்பான நாடகம் என்று நாம் நம்புகிறோம். ஆனால், நேற்று இரவில் ஒரு ஆள் கூட நாடகத்தைப் பார்க்க வரவில்லை." ஆனால், அந்த நாடகம்தான் இன்று உலகில் மிகச் சிறந்த நாடகங்களில் ஒன்றாகப் போற்றப்படுகிறது. எனக்கென்னவோ இம்மாதிரிப் புறக்கணிக்கப்படுபவை பின்னாளில் மிகச் சிறந்த பொக்கிஷமாகக் கருதப்படுகின்றன. இன்று கூட நெரிசலுடன் பார்க்கப்படுபவை காலத்தின் காற்றில் அடித்துச் செல்லப்பட்டு ஏதோ ஓரங்களில் கிடக்கின்றன.

## இப்போது என்ன எழுதிக் கொண்டிருக்கிறீர்கள்?

இப்போது எழுதும் நாடகத்தின் பெயர் '4.48 - மனச்சிதைவு'. இது 'ஏங்குதல்' போல வித்தியாசமானது. மனங் கலைந்து திரிவது பற்றியது. ஒரு மனிதனின் மனதில் பிரத்தியட்சத்துக்கும் கற்பனைகளுக்கும் இடையே உள்ள திரையை நீக்கும் போது நிகழ்வது என்ன என்பதை நாடகம் பரிசீலிக்கிறது. விழித்திருக்கும் போது நிகழும் வாழ்க்கைக்கும் கற்பனையில் படரும் வாழ்க்கைக்கும் வித்தியாசமென்பது ஒரு கட்டத்தில் அழிந்து விடுகிறது. போக, நீங்கள் எப்போது செயலாற்றுவதை நிறுத்துகிறீர்களோ அப்போது உலகம் நடக்க ஆரம்பிக்கிறது. உதாரணமாக எனக்கு மனச்சிதைவு என்றால், நான், இந்த மேஜை, நீங்கள் என்ற வித்தியாசமெல்லாம் எனக்குத் தெரியாமல் போய்விடும். கட்டப்பட்ட எல்லைகள் அனைத்தும் நிர்மூலமாகி விடும். நானும் சில எல்லைகளைத் தகர்க்க முயற்சி செய்து கொண்டிருக்கிறேன். அதில் ஒன்று உருவம், உள்ளடக்கம் பற்றிய கட்டமைப்பு. இதைச் செய்வது கடினமாக இருக்கிறது. நான் 'ஏங்குத'லுக்குப் பின் ஓரடி முன் வைத்துப் போக ஆரம்பித்திருக்கிறேன். 'தகர்த்த'லில் ஆரம்பித்து 'பெட்ரோவின் காதல்', 'கழுவுதல்', 'ஏங்குதல்' என்று வந்துள்ள என் பயணம் இப்போது இந்த இடத்துக்கு வந்திருக்கிறது. இதற்குப் பின் எதிர்காலத்தில் என்ன நடக்கப் போகிறது என்று எனக்கு இப்போது தெரியவில்லை.

**"ஸிந்துஜா "** <weenvy@gmail.com>

# தரிசனம்

**சங்கர நாராயணன்**

**ஓவியம்: நாகேஷ் கவுட்**

திருவண்ணாமலைக்கு இரண்டு டிக்கெட் கேட்டதும், "முன்னூத்தி அறுபது" என்றார். பேருந்தின் தரத்தைப் பார்த்துவிட்டு, கட்டணம் குறைவாகஇருக்குமென்றுஏனோநினைத்துவிட்டேன். இப்போது விலையைக் கேட்டதும் ஆச்சரியமாக இருந்தது.

இரண்டுஇருநூறுரூபாய்த்தாள்களை நீட்டினேன். பயணச் சீட்டுகளைக் கிழித்துக்கொடுத்த நடத்துநர், "சில்ற இல்ல. எறங்கும்போது வாங்கிக்குறீங்களா?" என்றார். திட்டாமல் மரியாதையாய்ப் பேசியதே போதுமென்றிருந்தது."சரிங்க" என்று சொல்லிவிட்டு நந்தினியைத் திரும்பிப் பார்த்தேன்.

என் தோள் மேல் தலை சாய்த்திருந்தாள். கண்கள் மூடியிருந்தன.

"மெட்ரோலலாம் நான் வரல. பஸ்ஸா... வாய்ப்பே இல்ல. ஒன்னு பைக் எடுத்துட்டு வா, இல்ல ஊபர் புக் பண்றேன். போலாம்".

இப்போதெல்லாம், எப்போதாவதுதான் எங்கள் ஆரம்பக் கால உரையாடல்களில் இருந்த நந்தினியை பார்க்க முடிகிறது. எனக்கு வருத்தப்படுவதற்கும் காரணங்கள் உள்ளன. சந்தோஷப்படுவதற்கும் காரணங்கள் உள்ளன.

எங்கள் வீட்டுக்குப் பக்கத்தில் புதிதாக சாய் பாபா கோயில் கட்டியிருப்பதாக நந்தினியிடம் சொன்னேன். அடுத்த ஒரு மணி நேரத்தில் வீட்டில் இருந்தாள்.



அலுப்பே பார்ப்பதில்லை இப்போதெல்லாம். ஒரு நாள் ஷீரடி, மறுநாள் கேரள பகவதி. அதற்கடுத்த நாள் கைலாசநாதர்கோயில்.வேண்டுதல் மட்டுமே செய்ய முடிந்ததால் அதைச் செய்வதற்கு எவ்வளவு தூரம் வேண்டுமாலும் செல்லத் தயாராய் இருந்தாள்.

பாபாவின் பாதங்களில் விழுந்து எழுந்துவிட்டு, கோயிலை மூன்று முறைச் சுற்றினோம். வெளியே வெண் பொங்கல் பிரசாதம் கொடுத்தார்கள். அங்கேயே உட்கார்ந்துசாப்பிட்டு முடித்து,கைகழுவிய பின் நந்தினியிடம், "உள்ள ஒரு சாமியார் இருக்கார் பாத்தியா?" என்றேன். "எங்கே?" என்றவளிடம், அவர் உட்கார்ந்து ஆசி வழங்கிக் கொண்டிருந்த திசையைக் காட்டினேன். "நீ இங்கயே இரு" என்று சொல்லிவிட்டு, அவரை நோக்கி விறுவிறுவென நடக்க ஆரம்பித்துவிட்டாள்.

"நந்தினி.. நந்தினி.."

அவள் காதில் வாங்கவே இல்லை. வேறு வழியின்றி, நானும் சாமியார் முன் போய் உட்கார்ந்தேன். எனக்கு கடவுள் நம்பிக்கை உண்டென்றாலும் தீவிர பக்தியெல்லாம் இல்லை. எப்போதாவது கோவிலுக்குப் போவதோடு சரி. சாமியார்களைச் சுத்தமாகப் பிடிக்காது. பிரச்சினை எனக்கில்லை என்பதால் அவளின் நம்பிக்கைகளுக்குக் குறுக்கே செல்வதில்லை.

தங்கச் சட்டமிட்ட கண்ணாடி அணிந்திருந்தார் சாமியார். வலது கையில் தங்கக் காப்பு. இரண்டு கை விரல்களிலும் மோதிரங்கள். பெரிய பாபா படம் பதித்த டாலரும் அணிந்திருந்தார்; அது மட்டும் தங்கத்தில் இல்லை. நெற்றியில் திருமண். முகமெல்லாம் பவுடர். மடியில் பெரிய திரை கொண்ட ஏதோ ஒருவகைச் செல்பேசி. ஓய்வுபெற்ற அரசு அதிகாரி அல்லது பள்ளி ஆசிரியர் என்றால் எல்லோரும் நம்புவார்கள்.

பெயர் தெரியவில்லை. பெயர் தெரியுமளவுக்குப் புகழ்பெற்றவராய் இருந்திருந்தால், இந்தச் சின்ன கோயிலில் உட்கார்ந்துகொண்டு ஏன் ஆசி வழங்கிப் போகிறார்.



நந்தினிஎதையும்கவனித்ததுபோல்தெரியவில்லை. கண்கள் கலங்க அவர் முன் உட்கார்ந்திருந்தாள். எனக்கு அவளைப் பார்க்கப் பார்க்கப் பாவமாய் இருந்தது.

“சொல்லுங்க.”

“நான் டிவோர்ஸ் அப்ளை பண்ணிருக்கேன். கொடுக்க மாட்றாங்க. அவங்க செஞ்ச எல்லாக் கொடுமைகளையும் பொறுத்துக்கிட்டேன். அம்மா வீட்டுக்கு வந்தவள,இனி வர வேணாம்ன்னு போன்ல கூப்ட்டுச் சொன்னாங்க. அப்படியும் ஒரு வருசம் வெயிட் பண்ணேன். என்னோட நகை, பணம்ன்னு எல்லாத்தையும் ஏமாத்தி எடுத்துக்கிட்டாங்க. அதுக்கும் சுப்ரீம் கோர்ட்ல கேஸ் போட்ருக்கேன். எனக்கு சாதகமா ரிசல்ட் வருமா?”

கண்களைத் துடைத்துக்கொண்டாள். அவள் குரலில், ‘வரும்னு சொல்லுங்க’ என்ற வேண்டுதல் நிறைந்து வழிந்தது.

“சுப்ரீம் கோர்ட்ல ஏன் போட்டீங்க. அங்க போனா லேட்டாகுமேமா?” சாமியாரிடமிருந்து இப்படி ஒரு கேள்வியை நான் எதிர்பார்க்கவில்லை. நந்தினியும் எதிர்பார்த்திருக்கவில்லை என்பது அவள் முகத்தில் தெரிந்தது. அதுவரை அலட்சியமாக இருந்த நான், அவர் பேசுவதைக் கவனமாகக் கேட்கத் தொடங்கினேன்.

“நான் அவங்க வீட்லருந்து வரும்போது ஒரு சுடிதார் எடுத்துட்டு வந்தேன். அவ்ளோதான் மிச்சம். எங்கப்பா அம்பது அறுபது லட்சம் செலவு பண்ணிக் கல்யாணம் பண்ணி வச்சார். அவங்க பண்ண

எல்லாக் கொடுமையையும் சகிச்சுக்கிட்டேன்."

நந்தினி தடுமாறினாள். குரல் உடையத் தொடங்கியது. அழத் தொடங்கிவிடுவாளோ எனப் பயந்தேன். தன் வாழ்வின் மிக மோசமான காலகட்டத்திலிருந்து தப்பிப்பதற்காக, முன்பின் அறிமுகமில்லாத ஒருவரிடம் வழி கேட்டு நிற்கிறாள்.

"புரியுதுமா. அதுக்கு ஏன் கோர்ட்டுக்குப் போன? யாரயாச்சும் வச்சு பஞ்சாயத்து பண்ணி வாங்கப் பாத்துருக்கலாமே?"

"அவங்க அதுக்கு ஒத்துவரல."

அவர் ஒரு நொடி அமைதியானார். நந்தினி பொறுக்க மாட்டாதவளாய், அடிநெஞ்சில் துடித்துக் கொண்டிருந்ததைக் கேட்டுவிட்டாள்: "என் பொருட்களையெல்லாம் கொடுப்பாங்களா? மனசாட்சியே இல்லாம நடந்துக்கிறாங்க."

"கொடுக்க மாட்டாங்கம்மா. எப்படிக் கொடுப்பாங்க? மனசாட்சியாவது ஒன்னாவது. அதெல்லாம் இருந்திருந்தா உன்ன ஏன் கஷ்டப்படுத்தப் போறாங்க."

ஏன்டா இவரைக் காட்டினோம் என்றிருந்தது.

அவ்வளவு செலவாகும், இவ்வளவு செலவாகும் என்று காசைப் பிடுங்குவார் என்ற எண்ணம் எனக்கு இருந்தாலும், ஏதாவது கோயிலுக்குப் போகச் சொல்லிப் பரிகாரம் சொல்வார் என்றே நினைத்தேன். அப்படி நினைத்துதான் நந்தினியிடம் காட்டினேன். ஆனால், வீட்டுப் பெரியவர்களின் அக்கறையோடு அவர் பேசியது எனக்கு விநோதமாக இருந்தது. சொல்வது அனைத்தும் உண்மை என்று தெரியும்தான். நந்தினிக்கும் அது புரியாமல் இல்லை. ஆனாலும், அவளின் நிலையோ இதை ஏற்றுக்கொள்ள மறுத்தது. அவள் அடிக்கடி என்னிடம் கேட்கும் கேள்விகள் இவைதான்: இவ்வுலகில் நடக்கும் எல்லாச் செயல்களுக்குப் பின்னாலும் ஏதேனும் காரண காரியங்கள் இருக்கும்தானே? எனக்கு நடந்தவையெல்லாம் ஏன் நடந்தன? எனக்குத் தீங்கிழைத்தவர்கள், என்னை நிர்கதியாய் விட்டவர்கள், என் ஆசைகளை, கனவுகளை அழித்தவர்கள் நன்றாக வாழ்கிறார்களே, அவர்களை நம்பியதைத் தவிர நான் வேறு என்ன தவறிழைத்தேன்?

கோயில் கோயிலாகச் சென்று விடை தேடுகிறாள். கையை உயர்த்தி ஆசிர்வதிக்கும் எல்லோருடைய பாதங்களிலும் விழுகிறாள்.

"போலாம்" என்றேன். நந்தினி திரும்பிப் பார்க்கவில்லை. சாமியார் ஒன்றும் பேசாமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தார். எப்படிச் சொன்னால் புரிந்துகொள்வாய் என்று யோசிப்பவர் போல் புருவத்தைச் சுருக்கிப் பார்த்தார்.

"அம்மா, கோர்ட்டுக்கு வெளிய சமாதானமா போகப்பாரு. இன்னொரு கல்யாணம் பண்ணிக்க. உனக்கு வயசு இருக்கு. எப்ப இதெல்லாம் முடியும்னு தெரியாது. வருசக் கணக்காகும். தலைய முழுகிட்டு அடுத்த வேலையப் பாரேன்."

"பரிகாரம் எதாவது பண்ணலாமா?"

அவளுக்குத் தேவை, ஆறுதலாய் நான்கு வார்த்தைகள். அவற்றைச் சொல்லி அனுப்பவதில் இந்த ஆளுக்கு என்ன பிரச்சினை. எரிச்சலைக் கட்டுப்படுத்திக்கொண்டேன்.

சாமியாருக்கும் புரிந்திருக்க வேண்டும். நீண்ட பெருமூச்சுக்குப் பிறகு,"திருவண்ணாமலை போய்ட்டு, சுவாமி பேர்ல ஒரு அர்ச்சனை, அம்பாள் பேர்ல ஒரு அர்ச்சனை பண்ணிட்டுவாமா. நல்லதே நடக்கும்" என்றார்.

"கண்டிப்பா பண்றேன்." மீண்டும் அவர் காலில் விழுந்தாள்.

நின்று நிதானமாக சுவாமியையும் அம்பாளையும் பார்க்க முடிந்ததில் நந்தினிக்கு நிம்மதி. மனம் அடையும் சின்னச்சின்ன ஆறுதல்கள்தான் இரவில் தூக்கத்தைக் கொண்டுவரும். எவ்வளவு மோசமான நாளாய் இருந்தாலும் இரவில் தூக்கம் வர வேண்டும். வந்தால்தான் அடுத்த நாளுக்குள் நுழைய முடியும்.

"பிஸ்கட் எதுவும் வச்சுருக்கியாப்பா. பாட்டிக்குப் பசிக்குது."

எங்களின் வலது பக்கத்திலிருந்து ஒரு குரல் கேட்டது. எழுபது வயதிருக்கலாம். மண்டபத் தூண் மேல் சாய்ந்துகொண்டு எதையோ முணுமுணுத்துக் கொண்டிருந்தார். கிழியாத புடவை. நெற்றி நிறைய விபூதி. அப்போதுதான் குளித்து முடித்தவர்போல் சுத்தமாக இருந்தார். ஆச்சரியம்தான். ஆனால், அது ஏன் எனக்கு ஆச்சரியமாய் இருந்ததெனத் தெரியவில்லை.

"பசிக்குது" என்றார் மீண்டும். எங்களிடம் பேசும்போது திருத்தமாகப் பேசினார். அவர் பேசியது தெளிவாகக் கேட்டது.

"இல்லையே பாட்டி. காசு வேணா தரவா?"

பையில் இருந்த இருபது ரூபாயை நந்தினியிடம் கொடுத்தேன். அவள் தன் கையில் வைத்திருந்த பத்தையும் சேர்த்துப் பாட்டியிடம் கொடுத்தாள்.

"நல்லாருக்கணும் சாமி நீயி."

பாட்டி பிறகு எங்களைப் பார்த்து முணுமுணுப்பைத் தொடர்ந்தார்.



“எந்த ஊர்லருந்து சாமி வர்றீங்க?”

“சென்னை.”

நந்தினி பதில் சொன்னாள். குரலில் சிறு உற்சாகம். அது, எஜமானரைக் கண்ட நாய்க்குட்டியின் உற்சாகத்தை ஒத்திருந்தது. எனக்கு வேறு எப்படியும் சொல்லத் தெரியவில்லை. அவள் சில நொடிகளேனும் தன் கவலைகளை மறந்தால் எனக்கு சந்தோஷம்தான். ஆனாலும், மனதில் சிறு உறுத்தல். எப்போதும் உடன் இருக்கும் என்னால் அவளுக்கு நிம்மதியைத் தர முடியவில்லை.

“நானும் அப்படித்தான் போகணும்.” அவரின் ஊர் என ஒரு பெயரைச் சொன்னார். வரிசையாக மூன்று நான்கு கிராமங்களின் பெயரைச் சொல்லி, “அதுக்கு அடுத்த ஊரு எங்க ஊருதான்” என்றார்.

பிறகு என்ன நினைத்தாரோ, கழுத்தில் அணிந்திருந்த கயிறை வலதுகையால் பிடித்துக் காண்பித்து, “தாத்தா செத்து இந்த மாசத்தோட பதினஞ்சு வருசமாச்சு” என்றார். அதைச் சொன்னபோது அவர் முகத்தில் விசேஷமாக எந்த மாற்றமும் இல்லை. நாங்கள் தெரிந்துகொள்ள வேண்டிய செய்தி அது, அவ்வளவுதான் என்பதைப் போல் சொன்னார். முகத்தில் மெல்லிய சிரிப்பு. அந்தச் சிரிப்பில் அவர் வயதுக்கே உரிய ஆசிர்வதிக்கும் தன்மை இருந்தது. பிறகு, முணுமுணுப்பு.

பாட்டியின் வலது கையை எடுத்து நந்தினி தன் கைக்குள் வைத்துக்கொண்டாள். “உங்களுக்கு நாங்க எதவாது செய்யணுமா பாட்டி. உங்களுக்கு யாராச்சும் இருக்காங்களா? இல்ல நாங்க ஆசிரமம் எதுலயாச்சும் சேர்த்துவிடுறோம். தயங்காமச் சொல்லுங்க.”

“அதெல்லாம் எனக்கு ஒரு கொறயும் இல்ல சாமி. ரெண்டு பையனுங்க உண்டு. நல்லா நெறஞ்சு வெளஞ்சிருக்காங்க.” நந்தினியின் கன்னத்தைக் கையில் ஏந்திக்கொண்டாள் பாட்டி.

“போக பதினஞ்சு, வர பதினஞ்சுனு மொத்தம் முப்பது ரூபா” என்று சொன்னபோது, தினமுமோ அல்லது வாரம் ஒரு நாளோ இரண்டு நாளோ வந்துபோகிறார் என்று புரிந்தது.

பாட்டி என்னைப் பார்த்தாள். பிறகு, நந்தினியிடம் மீண்டும் தன் கழுத்தில் இருந்த கயிறைப் பிடித்து, “உன் கணவரா?” எனக் கேட்காமல் கேட்டாள்.

“ம்ம்.”

“நல்லா இருப்பீங்க சாமி. நல்லா இருப்பீங்க. நூறு வருசம் நல்லா இருப்பீங்க. உன் நல்ல மனுசுக்கு ஒரு கொறயும் வராது. நீங்க கோயிலுக்குள்ள வர்றப்பயே உங்களப் பாத்தேன். உன் மொகம் பூராக் கவல. உங்களுக்குச் சின்ன வயசு. புதுசாக் கல்யாணம் ஆனவங்க மாதிரி இருக்கீங்க. ஆனா, உன் மொகத்துல அது தெரியல.”

நந்தினியிடம் கண்ணீர் வழியத் தொடங்கியது.

“அழாத தாயி. உன் குறையெல்லாம் தீர்ற நேரம் வந்திருச்சு. அண்ணாமலைத் தாய் மேல ஆணையா சொல்றேன். சீக்கிரமே நீ நெனச்சது நடக்கும். ஒனக்குப் பொண் கொழந்ததான் பிறக்கும். ஒரு பிள்ளதான் விதிச்சிருக்கு. ஆனா, பொம்பள நினச்சா விதியவே மாத்திப்புடலாம். சாவித்திரி கத தெரியுமா உனக்கு.” பற்கள் தெரியச் சிரித்தாள் பாட்டி.

நந்தினியும் சிரித்தாள். கடந்த ஒரு வாரத்தில் முதன்முறையாக.

“எல்லாம் சரியாயிடும். பயப்படாமப் போய்ட்டு வா.” பாட்டி எங்கள் இருவரின் தலைகளிலும் கைவைத்து ஆசிர்வதித்தாள்.

நாங்கள் மேலும் இரண்டு நிமிடங்கள் அவர் பக்கத்தில் உட்கார்ந்திருந்து விட்டுக் கிளம்பினோம். கோபுர வாசலைத் தாண்டுவதற்கு முன் ஒரு முறைத் திரும்பிப் பார்த்தேன். பாட்டி அங்கேயேதான் இருந்தாள். மறையவெல்லாம் இல்லை.

**சங்கர நாராயணன்**
<narayanan.sangara@gmail.com>

## தாமரை பாரதியின்

# உவர் மணல் சிறு நெருஞ்சி

**வேல் கண்ணன்**

மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற.

-திருவள்ளுவர்

எல்லா பிரச்சனைகளும் மனதின் மாயை.

- எக்கார்ட் டோல்லே

மனம் என்பது என்னவென்று வரையறுப்பது? இதுதான் கவிதை என்று வரையறுக்கும் அபத்தம் அல்லவா அது? மனம், கவிதை இரண்டும் பலவேறு விதங்களில் ஒன்றுபட்டு போகிறது. தொல்காப்பியம் காலந்தொட்டே இலக்கியம், புறம் தொடர்பான செயற்பாடுகள் அழுத்தங்களை விடவும் அகவயமான இடர், வெளிச்சங்கள், குழப்பங்கள், தெளிவுகள் குறித்து அதிகம் பேசி இருக்கின்றது. எனக்கு தெரிந்த ஒரு மனோதத்துவ மருத்துவர், சங்க இலக்கியங்களின் தொடர் பரிச்சயத்துடன் இருப்பார். பெரும் மனப் பிறழ்வுக்கான தீர்வுகள், சங்க இலக்கியத்தில் கொட்டி கிடப்பதாக நம்புகிறார்.

உளவியல் சார்ந்து பேசும் கவிதைகள் இன்றுவரை வெளிவந்து கொண்டிருக்கின்றன. அதன் தொடர்ச்சி தாமரை பாரதியின் இந்த 'உவர் மணல் சிறு நெருஞ்சி.' உளவியலை சார்ந்து பல கவிதைகள் இந்த தொகுப்பில் இருக்கின்றன.

மனமென்னும் மாய
இருள் குகையுள்
அறியாமைத் திரையை
அகற்றி செல்லும் உனது
ஞானக் கரங்களின்
ஒளியுறுத்தலில்
பிரகாசிக்கச் செய்கிறாய்.
இச்சிறு வாழ்வை
தேவ மலரே

இதில் மனம் என்பது இருள் குகை என்று குறிப்பிடும் பொழுது 'மாயம்' என்பதையும் சேர்க்கிறார். இருள், குகை இரண்டுமே மாயமானது. இதை உணர்த்தும் ஒளி, எண்ணங்களால்தேடல்களால்கேள்விகளால் கிடைக்கப்பெறும் ஞானத்தின் கரங்களில் அமர்ந்திருப்பதை கவிதை சொல்லுகிறது.



தேவ மலர் என்பது பெண்; மலர் என்பதையும் கடந்து ஒரு கவிதையாகவும் இருக்கலாம்.

'நிலைபேறு' கவிதையில் மனத்தினை மாயவனமாக குறிப்பிட்டு என்றென்றும் வாசனை குறையாத சிறு மலராக இந்த வாழ்வினை சொல்லுகிறார் தாமரை பாரதி.

உனது மனமென்னும் மாய வனத்துள்
வாடாது வதங்காது நிலையாக
வாசம் வீசிக்கொண்டிருக்கிற
சிறு மலரே
வாழ்வின் சாஸ்வதம்.
அந்த 'சிறு மலர்' நித்தியத்துவம் பெற்றது.

'நினைவுவாழ் தாவரங்கள்' கவிதையில் மனம் உலாவும் நினைவுகளிலிருந்து, வேர் பிடித்து மேலாகவும் கீழாகவும் பரந்தும் வளரும் தாவரங்கள் என்கிற உறவு, பகைமையை குறிப்பிடுகிறார். சமயத்தில் அந்த தாவரங்களுக்கு பொறுப்பேற்க சொல்லி நம்மையும் அழைக்கிறார்.

தொகுப்பில் எனக்கு மிகவும் பிடித்த 'பூச்சிகள்' கவிதையில், சிறுக சிறுக சேரும் மன அழுத்தங்கள் வழியாக பெருகி வெடிக்கும் மனப்பிறழ்வை மழைக்கு பின்பான சேரும் ஈசல் பூச்சிகளுடன் ஒப்பிட்டு விளக்குகிறார். கவிதையின் இறுதி வரிகள்,

ஒரு கூடை நிறைய பூச்சிகளை
அள்ளிய பிறகும்
தயாராக இருக்கிறது
வெற்றுக் கூடையொன்று.

இங்கே வெற்றுக் கூடை மனம் என்னும் மாயப் பிசாசு என்பதறிவோம்.

பொதுவாக, மன எண்ணங்கள், குழப்பங்கள் வெளிப்பாடே கனவு

என்பார்கள் (விதிவிலக்கு உண்டு). அந்த கனவுகளுக்கு நிறம் கிடையாது. கருப்பு, வெள்ளை கலந்த ஒரு விதமான சாம்பல் நிறமாக கொண்டால், சாம்பல் குறித்து 'சாம்பல் சித்திரங்களாக' உருவாக்குகிறார். கோபுரமெரியும் காட்டில் கருஞ்சாம்பலாக, இருபத்தியோராவது விரலாக, மெய்ப்பிம்பமாக, நடனமிடும் சிற்றலையாக, கருக்கொண்டவள் பசியின் தீனியாக தான் இருப்பதாக ஐந்து விதமான சித்திரங்களை வரைகிறார். ஒரு வரையறைக்குள் வர இயலாதவை, சாம்பல் நிறம் கொண்ட கனவும் அதனின் மனமும் என்பதை சொல்லும் கவிதை.

மன வெளியை இவ்வளவு கொண்டாடிய, பேசிய, பகுப்பாய்வு செய்த கவிதைகள் 'அஃது' விட்டுவைக்குமா என்ன?, ஆம் அஃது 'ரகசியமே.' மனம் என்னும் மாயைக்குள் ரகசியம் என்பதற்கு தனியறை உண்டு. இந்த தனியறை எல்லோருக்கும் இருக்கிறது என்பதை மறுக்க முடியாது.

பறிப்பவரும் சூடியவரும் யாருமற்ற ரகசியங்கள் சரம்சரமாக பூத்துக் கிடப்பதாக சொல்லும் தாமரை பாரதி, அதனின் அழகிய முரணான பகிர்தலுக்கான வேட்கையையும் ரகசியங்கள் தன்னுள்ளே கொண்டுள்ளன என்பதை சொல்லுகிறார்.

யாரிடமேனும் சொல்லப்பட்டு விட வேண்டுமென<br>
வேட்கையுருக்கின்றன<br>
அந்தரங்கங்களும் ரகசியங்களும்.

மேலும், 'சொற்களற்ற வெற்றிடங்கள்' கவிதையும் சொற்களின் வெற்றிட ரகசியத்தின் வேறு முகம் காண்பிக்கிறது. நிரப்ப முடியாத வெற்றிடங்களை பழைய புகைப்பட கருவியின் திறந்து மூடும் கணத்தில் நிகழும் ரகசிய தன்மையை விளக்கும் நல்லதோர் கவிதையிது.

கடல்.. எவ்வளவோ சொல்லலாம். கடலை, முதல் உயிரைப் பிரசவித்த பெரும் தாய் என்கிறார் கவிஞர். வானின் கீழ் இருக்கும் எல்லா உயிர்களையும் தன்னுள் அடங்கியிருக்கிறது கடல். கடலை பார்ப்பவனை கடலும் பார்க்கிறது என்று முடியும் இறுதி வரிகளை, கடலை நேசிப்பவன் கடலால் நேசிக்க படுகிறான் என்று 'கடலால் நேசிக்கப்படுபவர்' என்ற மமதையில் மகிழ்கிறேன். ஒரு காட்சி விவரிப்பதன் வழியாக வேறு ஒன்றை சொல்லும் கவிதையிது. இந்த தொகுப்பு எனக்கு இணக்கமானதற்கு 'கடல் பார்த்தல்' கவிதையும் முக்கியமான காரணம்.

தஸ்தயேவ்ஸ்கி உட்பட பலரும் 40க்கு பின்பான வாழ்வை கேள்விக்கு உட்படுத்தி இருக்கிறார்கள். கவிஞர் தேவதச்சன் 'நாற்பது வயதில் நீ நுழையும் போது..' என்று தொடங்கும் கவிதையை 'அன்பின் பதட்டம்' என்று முடிக்கிறார். தாமரை பாரதியோ வாழ்வின் மற்றுமொரு தொடக்கம் என்று சொல்லுகிறார்.





Second shower.<br>
இவ்வளவு காலமாக<br>
எங்கேதான் தேக்கி<br>
வைத்திருந்தாயோ<br>
மரத்திலிருந்துதிரும்<br>
இரண்டாவது மழையைப்<br>
போன்றதான<br>
உனதன்பை.

மற்றுமொரு கவிதையில் காலத்தையும் கிழடு தட்ட வைத்து விடுகிறார்.

இருபதில் பார்த்தபோது<br>
எப்படி இருந்தாயோ<br>
அப்படித்தான்<br>
இருக்கிறாய் நாற்பதிலும்.

என்ன,<br>
காலம்தான் கொஞ்சம்<br>
கிழடு தட்டி விடுகிறது.

காலத்தையே சொல்வது சற்று அதிகபடியாக இருந்தாலும், கவிதையெனும் மாயக் கயிற்றின் சொடுக்கலுக்கு, மகுடி அசைவுக்கு மயங்கி தலையசைக்க தோன்றுகிறது.

90களின் இறுதியில் கவிதை எழுத தொடங்கிய தாமரை பாரதி 2019ஆம் ஆண்டில் 'தபுதாராவின் புன்னகை' என்ற முதல் தொகுப்பை வெளியிட்டார். இரண்டாவது தொகுப்பான இதில், உள்ளடக்கத்தின் பாய்ச்சல் வேறு மாதிரியாக இருந்தாலும், கவிதைகளில் தேவையற்ற சொற்கள் நீக்கியும் சில கவிதைகளை தவிர்த்தும் இருந்துருக்கலாம் என்று எனக்கு தோன்றுகிறது. மொழியிலும் நடையிலும் பெரிதான மாற்றங்கள் இல்லை. ஆனால், சிறு நெருஞ்சி பூக்கள் தொடர்ந்து பூப்பதற்கான களத்தையும் கருப்பொருளையும் நூலாசிரியரின் உவர் மணல் தன்னகத்தே கொண்டுள்ளது.

**வேல் கண்ணன்** <velkannanr@gmail.com>

---

உவர் மணல் சிறு நெருஞ்சி (கவிதைத் தொகுப்பு) – தாமரை பாரதி; பக்கம் 134, விலை ரூ. 130; வெளியீடு: டிஸ்கவரி பப்ளிகேஷன்ஸ், மின்னஞ்சல்: discoverybookpalace@gmail.com, தொலைபேசி: +91 87 5450 7070



# சு. வெங்குட்டுவன் கவிதைகள்

## டிலக்ஸ் பொன்னி அரிசி

வைரக்கிரீடம் டிலக்ஸ் பொன்னி அரிசிச் சாக்கில்
காலி மதுபாட்டில்களை சேகரித்து வைத்திருந்தவன்
ஹிந்தியில் உளறியபடி நின்றுகொண்டிருந்தான்

எங்கோ பிறந்து எங்கோ வளர்ந்து
இங்கே வந்து பைத்தியமாகத்
திரிகிறானேயென நினைத்துக் கொண்டேன்
நினைக்காவிட்டாலும் அதுதானே உண்மை?

பிறந்த எங்கோவையும் வளர்ந்த எங்கோவையும்
கற்பனையில் யூகித்தபடி அடுத்த எட்டை வைத்தேன்
அவனைத் தாண்டிப்போக இதுபோலயின்னும்
பத்து எட்டுகளையாவது வைத்தாக வேண்டும்

ஒரு எட்டுக்கு ஒருசில நினைப்புகள்
பத்து எட்டுக்கு பற்பல நினைப்புகள்
அதிலேயொன்று பாட்டிலையுடைத்து கழுத்தை
அறுத்துவிட்டானேயென்றால் என்பதாக இருந்தது

கடந்தபிறகான முதல் எட்டை
வைக்கும்போது ஒரு நினைப்பு வந்தது
'நல்லவேளை தப்பித்தேன்..' அடுத்த எட்டில் மற்றுமொரு
நினைப்பு வந்தது
'நல்லவேளை.. பைத்தியகாரனாக இருந்ததால் தப்பித்தேன்'

நினைக்காவிட்டாலும் அதுதானே உண்மை?

## மொக்..

வெள்ளையுஞ் சொள்ளையுமாய் சந்தனமும் சவ்வாதுமாய்
உறவும் நட்பும் புடைசூழ மகிழ்ச்சியைப் பார்க்கப்
போய்க்கொண்டிருந்தார் மாப்பிள்ளை மொக்கைச்சாமி

மகிழ்ச்சியின் வீட்டில் மகிழ்ச்சியின் சகோதரனும்
மகிழ்ச்சியின் பெற்றோரும் மற்றும் மகிழ்ச்சியின்
உறவினர்களெல்லோரும் அமர்ந்திருந்தனர்

மகிழ்ச்சியின் சகோதரன் மகிழ்ச்சியை
தண்ணீர் கொண்டுவரும்படி கூறினான்
இனிப்புகள் கொண்டுவரும்படி கூறினான்
மகிழ்ச்சியின் சகோதரன் கடைசியாக மகிழ்ச்சியை
தேநீர் கொண்டுவரும்படியும் கூறினான்

மொக்கைச்சாமி தண்ணீரை அருந்தினார்
இனிப்புகளை உண்டார் தேநீரையும் பருகினார்



மகிழ்ச்சி வந்ததும் தெரியவில்லை
போனதும் தெரியவில்லை
அருகிலிருந்த பெரிய மனிதரை வினவினார்
'வந்தமேனிக்குப் போயிட்டா எப்படி? மகிழ்ச்சியைச்
சற்றே கண்குளிரக் காண விரும்புகிறேன்.'
'அதெல்லாம் முடியாது. மகிழ்ச்சினா அப்படித்தான்
வந்தொடனே போயிரும் மின்னல்மாதிரி' என்றார் பெரியவர்

பிறகு திரும்பிவரும் வழியில்
மொக்கைச்சாமி உலகத்தாருக்கெல்லாம் கூறியது
'மகிழ்ச்சிகளில் ஒன்றுமேயில்லை
மகிழ்ச்சிகளைக் காண்பதற்கு முந்தைய கணங்களில்தான்
எல்லாமே இருக்கிறது.'

## வித்தை

கழுத்தோடு சுற்றாது
தோள்மீது தொங்கவிட்டு
சீறும் எதிர்காற்றில் சிட்டாகப் பறக்கின்றார்
முழுக்கைச் சட்டையும் லுங்கி வேட்டியுமாய்
டிவிஎஸ் எக்ஸ்செல்லில் ஒருவர்
அவர் பறப்பது இருக்கட்டும்
அந்த ஈரிழைத்துண்டு பறக்காமல் இருக்கிறதே
அதைச் சொல்லுங்கள்.

## வெண்ணைவிழி சுண்ணம்விழி

ரஜினிகாந்தும் சரத்பாபுவும்
நீண்டகாலந்தொட்டே நண்பர்கள்
ரஜினிகாந்தைத் தெரிந்தோருக்கெல்லாம்
சரத்பாபுவைத் தெரியாமலிருக்காது ஆனாலும்
காட்டிக்கொள்ள மாட்டார்கள்
ரஜினிகாந்தைப் போலவே சரத்பாபுவும் அழகன்தான்
வசீகரன்தான் ஆனாலும் பார்
நாயகியருக்கெல்லாம் ரஜினிகாந்தின்மீதே
மையல் வரும்
ரஜினிகாந்தைப் போலவே சரத்பாபுவும்
பெருந்தோளர்தான் வலுவுடலர்தான்
ஆனாலுமிந்த வில்லன்கள் ரஜினிகாந்திடம் மட்டுமே
உதைபடுவார்கள் தோற்று ஓடுவார்கள்
உற்ற நண்பனை குற்றஞ்சாட்டும் சூழ்நிலை
ரஜினிகாந்துக்கும் வந்திருக்கிறது சரத்பாபுவுக்கும்
வந்திருக்கிறது
கவனித்துப் பாரடி ஞானப்பெண்ணே
உன் ரஜினிகாந்தின் குரலில் வெறி துள்ளுவதை
என் சரத்பாபுவின் குரலில்
உயிர் நடுங்குவதை.

## கிட்நாப்

பச்சைக் கம்பளம் விரித்த மலைச்சரிவில்
சிறகுமுளைத்த மான்குட்டியாய்
துள்ளித்துள்ளி ஓடிக்கொண்டிருந்தார்
சரோஜாதேவி

முறுக்கம் மிகுந்த முரட்டுக்காளையாய்
துரத்திக்கொண்டுபோன எம்ஜிஆர் தோளைத்தொட்டுத் திருப்ப
உள்ளங்கையிரண்டிலும் முகத்தை மூடிக்கொண்டார்
வெட்கம் மிகுந்த சரோஜாதேவி

உற்சாக எம்ஜிஆர்
கைவிரலில் சொடக்கிட்டு ஒரு துள்ளல்
துள்ளிவிட்டுத் திரும்ப சரோஜாதேவியைக்
காணவில்லை

எதிர்பார்த்து எதிர்பார்த்து
ஏமாந்து ஏமாந்து உள்ளங்கைகளை
தானாகவே விலக்கிக்கொண்ட சரோஜாதேவி
ஏகத்துக்கும் அதிர்ந்தார்
ஆவாரையும் வெள்ளைவேலானும் மண்டிய
என் நிலத்தின் எருக்கலம்பூவொன்றை
நீட்டியபடியே கூறினேன்
'அச்சம் வேண்டாம் சரோ..
இனி நானேயுனக்கு எம்ஜிஆர்'

**சு. வெங்குட்டுவன்** <venkuttuvan@gmail.com>

# காலம் மாறினாலும், என்றும் மாறா கொள்கைகள்.

## வாழ்வின் ஒவ்வொரு தருணத்திலும் இருப்போம் உங்களுடன்.



ஸ்ரீராம் சிட்ஸ். 1974 முதல் நான்காவது தலைமுறையாக மக்களின் பொருளாதார தேவைகளைப் பூர்த்திசெய்து அவர்களின் நம்பிக்கையை பெற்ற நிதி நிறுவனமாக விளங்கி வருகிறது.

காலம் வேகமாக மாறினாலும், வணிக கொள்கைகள், எளிய நடைமுறைகளில் நாங்கள் கொண்ட நம்பிக்கையில் எந்த மாற்றமும் இல்லை. இங்கு மக்களுக்கே முதலிடம்.

**பொருளாதார சக்கரத்தின் அச்சாணி.**

எளிய மக்களே நம் நாட்டில் பெரும்பான்மை யானவர்கள். அவர்கள்தான் பொருளாதார சக்கரத்தின் அச்சாணி. அவர்களை உள்ளடக்கியதே உண்மையான பொருளாதார வளர்ச்சி.

எளிய மக்களே ஸ்ரீராம் நிறுவனங்களின் நேரடி பயனாளர்கள். ஆகவேதான் அவர்களுக்கு பயனளிக்கக்கூடிய சேவைகளையே விருப்ப வணிகமாக தேர்ந்தெடுத்துள்ளன ஸ்ரீராம் நிறுவனங்கள். சீட்டுத் திட்டங்கள், நுகர்வோர் கடன், தனிநபர் கடன், காப்பீட்டுத் திட்டங்கள் என மக்களின் அனைத்து பொருளாதார தேவைகளுக்கும் இங்கு தீர்வு அளிக்கப்படுகின்றன.

**எளிய மக்களின் மீது நாங்கள் கொண்ட அக்கறை.**

இந்தியா மிகப்பெரிய தொழில் முனைவோர் திறன் கொண்ட நாடு. நீங்கள் தினந்தோறும் சந்திக்கும் சிறு மற்றும் நடுத்தர தொழில் முனைவோர்களான பால், காய்கறி வியாபாரிகள் முதல் பிரிண்டிங், வெல்டிங் மற்றும் இன்ஜினியரிங் தொழிலாளிகள் என அனைத்து தரப்பினரின் திறமைகளையும் ஊக்குவித்து, அவர்களின் வருவாய் தொடர்ந்து அதிகரிக்கவும், வாழ்க்கைத் தரம் உயரவும் தேவையான பொருளாதார வாய்ப்புகளை உருவாக்கி தருகின்றன ஸ்ரீராம் நிறுவனங்கள். அதன் மூலம் பொருளாதார வளர்ச்சியில் மக்களும், மக்களுடன் சேர்ந்து நாங்களும் வளர்கிறோம்.

**வாழ்வின் ஒவ்வொரு தருணத்திலும் உங்களுடன்.**

ஸ்ரீராம் நிறுவனங்கள் சீட்டு சந்தாதாரர்கள், சிறு மற்றும் நடுத்தர தொழில் புரிவோர் என இதுவரை ₹ 60,000 கோடிக்கு மேல் பணம் பட்டுவாடா செய்துள்ளன. 700 கிளைகள், 12,000 பணியாளர்கள் மற்றும் 80,000 முகவர்கள் மூலம் 200 இலட்சம் குடும்பங்களின் வளமான வாழ்வுக்கு வழிகாட்டியுள்ளன.

விஜயதசமியை முன்னிட்டு, ஸ்ரீராம் சிட்ஸ் கிளைகளில் நடைபெறும் நவராத்திரி சீட்டுவிழாவில் குடும்பத்தினரோடு பங்கு பெறுங்கள். சேமிப்பு எவ்வளவு சிறியதானாலும், கனவு எவ்வளவு பெரியதானாலும், வாழ்வு வளம்பெற சரியான தீர்வு வழங்கப்படும். உங்கள் வாழ்வும், குடும்பத்தின் எதிர்காலமும் வளம்பெறுவதை கண்கூடாக காணுங்கள்.

மேலும் விவரங்களுக்கு அருகிலுள்ள ஸ்ரீராம் சிட்ஸ் கிளைக்கு வாருங்கள்.

**உங்கள் ஒவ்வொரு முயற்சிக்குப் பின்னாலும் நாங்கள் இருக்கிறோம்.**

ஸ்ரீராம் சிட்ஸ்

மக்களின் வளமான வாழ்வுக்கு வழிகாட்டி

**ஸ்ரீராம் சிட்ஸ் தமிழ்நாடு பிரைவேட் லிமிடெட்**

கிரீம்ஸ் துகார், 149 கிரீம்ஸ் சாலை, சென்னை 600 006, போன்: 4223 6000 • www.shriramchits.com

WORDCRAFT

# வாழ்வு பேசிக் கடப்பதற்கே!

**சஞ்சயன்**



பாதை

*சாண்டியாகோ டி கம்போஸ்டெலா நோக்கி மூன்று முறை யாத்திரை சென்றிருக்கிறேன். ஒவ்வொன்றும் சராசரி 800 கி.மீ. தூரம். இந்தத் தேவாலயத்தை நோக்கி நடப்பதற்கு ஸ்பெயின் நாட்டினுள் மட்டும் பல பாதைகள் உண்டு. இதில் ஏழு பாதைகள் யாத்திரிகர்களுக்கு உரிய வசதிகளைக் கொண்டிருக்கின்றன. இதைவிட பல பாதைகள் அநேகமான ஐரோப்பிய நாடுகளிலிருந்தும் இருக்கின்றன. யேசுநாதரின் ஊரில் இருந்தும் ஒரு பாதை இருக்கிறது. அது ஏறத்தாழ 5000 கிமீ தூரமானது. அங்கிருந்து நடந்தவர் ஒருவரையும் நான் சந்தித்திருக்கிறேன்.*



*எனது வாழ்வின் மிகவும் மகிழ்ச்சியான நிகழ்வுகளைப் பட்டியலிட்டால்,இந்த மூன்று யாத்திரைகளும் முக்கியமானவை. ஆனால், மூன்று முறையும் வாழ்வு விதித்துவிட்ட பெரும் அயர்ச்சியில் இருந்து மீண்டுகொள்ளவே நடக்க ஆரம்பித்தேன்.*

*பெரும் துன்பத்திலிருந்து மகிழ்ச்சிக்கு வழி கிடைத்திருப்பது எத்தனை பெரிய முரண் என்று பார்த்தீர்களா? 'துன்பம் தொடர்ச்சியானது அல்ல என்பதும், அதை மகிழ்ச்சிக்கான படிக்கட்டாகக் கொள்' என்பதும் இந்த யாத்திரைகள் கற்றுத்தந்த பெரும் பாடம்.*

*இதைவிட, இந்த நாட்களில் சந்தித்த மனிதர்கள் கற்றுத் தந்தவை ஏராளம். அவர்களிடமிருந்து பெற்றுக் கொண்டளவிற்கு கொடுத்திருக்கிறேனா என்பது சந்தேகமே. யாத்திரிகர்களில் பெரும் பான்மையானவர்கள் தங்கள் மனதுக்குள் சுமக்கும் பெருவலிகளை ஏதோ ஒரு வழியில்*



பாதை

கடந்துகொள்ளலாம் என்ற நம்பிக்கையிலேயே நடக்கிறார்கள். நானும் அப்படித்தான்.

பிரான்ஸ் தேசத்தின் தெற்கு எல்லைக்கு அப்பால் ஸ்பெயின் நாட்டில் பம்பலூனா (Pampalona)என்று ஒரு நகரம் இருக்கிறது. நகரத்தின் வீதிகளில் எருதுகளை ஓடவிட்டு அவற்றை மக்கள் கலைத்துக்கொண்டு ஓடும் பெருவிழாவொன்று வருடம் தோறும் அங்கு நடைபெறும். இந்த விழாவை சான் ஃபெர்மின் (San Fermín) விழா என்று அழைக்கிறார்கள்.

யாத்திரைக்கான முதல் நாள் நான் பம்பலூனா வந்தடைந்தபோது அந்த விழாவிற்கு சில நாட்கள் இருந்தன. நகரம் விழாக்கோலம் பூண்டுகொண்டிருந்தது. அங்கிருந்துதான் சாண்டியாகோ டி கம்போஸ்டெலா (Stantiago de Compostela) நகரத்தினை நோக்கிய எனது 'பிரெஞ்சு வழி' (French Way) என்றழைக்கப்படும் யாத்திரைப் பயணத்தை ஆரம்பித்திருந்தேன்.

பம்பலூனாவில்இருந்துபுறப்பட்டமுதல்நாள்பின் மதியத்தில் கடும் வெய்யில் எறித்துக்கொண்டிருக்க, காற்றும் நின்றுபோனது. அந்த அம்மலான காலநிலையில், வேர்வையுடன் நடப்பதில் பெரும் சிரமப்பட்டுக்கொண்டு, இளைப்பாற ஒரு தோதான ஓர் இடத்தைத் தேடிக்கொண்டிருந்தேன்.

அப்பொது வீதியோரத்து மரமொன்றின் கீழே ஒருவர் தனது முதுகுப் பையை இறக்கி வைத்துவிட்டு, உட்கார்ந்திருந்தபடி, தனது சப்பாத்துக்களைக் கழற்றி, கால்விரல்களைப் பார்த்துக் கொண்டிருந்தார். அவரது மூன்று கால்விரல்களில் நீர் கட்டியிருந்தது.

கட்டையான உருண்டையான உருவம். Yes, No, Thank You என்பதும் இன்னும் சில சொற்களும்தான் அவரது ஆங்கிலம். அதைவிட மோசமானது எனது ஸ்பானிஷ் பேரறிவு. கூகிள் மொழிபெயர்ப்பியை உதவிக்கு அழைத்துக்கொண்டேன்.

கால் விரல்களில் நீர் கட்டிக் கிடந்ததால் பல வாரங்களாக நடக்கிறாராக்கும் என்று நினைத்து, "பல நாட்கள் நடந்தால் இப்படித்தான். நீரை அகற்றிவிட்டு, பிளாஸ்திரி போடுங்கள், விரைவில் காய்ந்துவிடும்" என்றேன்.

அவரும் "சீ சீ" (ஓம் ஓம்) என்றார்.

நீரை அகற்றுவதற்கு ஊசியால் குத்திக்கொள்ள அவரால் முடியவில்லை. ஊசி போட்டுக்கொள்ள அஞ்சும் குழந்தை போன்று பயந்து கொண்டிருந்தார். அன்று மாலை எமது தங்குமிடம் வரும் வரையிலும் அவர் நொண்டி நொண்டியே நடந்தார்.

தங்குமிடத்தில் மேலும் இருவர், "நீரை அகற்றினால்தான் நாளை நடக்கலாம். இல்லையேல் நிலைமைமோசமாகும்"என்றபின், நீரை அகற்றுவதற்கு, தூக்கு மேடைக்குச் செல்லும் கைதிபோன்று, பயந்து பயந்து நீர்க்கொப்பளத்தில் ஊசியால் பெரும் பாடுபட்டுக் குத்திக்கொண்டார்.

அதன்பின்னான நான்கைந்து நாட்களாகப் பேபேயுடன் நடந்து கொண்டிருந்தேன். ஆம், அதுதான் அவரது பெயர். மனதுக்கு அவரைப் பிடித்திருந்ததால் மொழி ஒரு பிரச்சினையாகவே இருக்கவில்லை. நகைச்சுவை உணர்வு மிகுந்தவராக இருந்தார்.

ஆனால், அவர் கண்ணில்படும் தேவாலயங்கள் அனைத்திலும், உலகத்தில் உள்ள அனைவரின் துயரயங்களுக்காகத் தானே செபிப்பதுபோன்று 10-15 நிமிடங்கள் முழந்தாளிட்டு முணுமுணுத்துக் கொண்டிருந்ததை என்னால் தாங்க முடியவில்லை.

நாங்கள் நடந்த ஊரில் வழியெங்கும் சந்திக்குச் சந்தி ஒரு தேவாலயம் இருந்தது. அது மட்டுமல்ல, கிராமப்புறங்களில் வீதிக்கு வீதி மாதா சொரூபம் இருக்கும். சில வீதிகளில் இரண்டு இருக்கும். அந்த இடங்களிலும் நின்று நெஞ்சில் சிலுவையை வரைந்துகொண்டு செபிப்பார். எரிச்சலை அடக்கிக்கொண்டு பொறுத்திருந்தேன்.

"அப்படி என்னத்தைத்தான் கடவுளிடம் வேண்டுகிறாய்? அந்தாளுக்கு உனது வேண்டுதல்களை கவனிக்கநேரம்போதாதுஇருக்கும்போலிருக்கிறதே?" என்றேன்.

அவரது கண்கள் என்னை ஊடுருவிப் பார்த்தன. ஆனாலும் அவர் பதில் சொல்லவில்லை.



பாதை

மனிதர்களையும் மதங்களையும் அவர்களது சடங்குகளையும் எனக்கு ஒவ்வாதவையாக இருப்பினும், மதிக்கவேண்டும். அது அவரவர்களின் ஆத்மதிருப்திக்கானது.எனது ஆத்மதிருப்திக்காகநான் எதையாவது செய்யவில்லையா? அதுபோலத்தான் இதுவும். எனவே, அதன்பின் நான் அவரிடம் எதுவுமே கேட்கவே இல்லை.

அன்று நவரேட் (Navarrete) என்னும் இடத்தில் இருந்து அசோஃப்ரா (Azofra) என்னும் கிராமத்தை அடைவதே திட்டம். மழை தூறிக்கொண்டிருந்தது. வழியில் கற்களாலான ஒரு செயற்கைக் குகை இருப்பதைக் கண்டு அதற்குள் சென்றேன். பேபே வெளியில் புதினம் பார்த்துக்கொண்டு நின்றார்.

1980களின் நடுப்பகுதியில் இலங்கையின் அரச தொலைக்காட்சிச் சேவையில் இங்கிலாந்தின் எஃப்ஏ கோப்பை (FACup) காற்பந்தாட்டக் காணொளிகளைக் காண்பிப்பார்கள். அந்நாட்களில் பிடித்தது லிவர்பூல் (Liverpool) விளையாட்டுக் கழகத்தின் மீதான எனது காதலும் பைத்தியமும். இன்றும் பைத்தியம் அகன்றதாயில்லை. முற்றியிருக்கிறது. 'You'll never walk alone' (நீங்கள் ஒருபோதும் தனியாக நடக்க மாட்டீர்கள்) என்பது எமது கழகத்தின் தாரக மந்திரம். உலகப் பிரசித்தமான வாக்கியம் இது. இந்த வாக்கியத்தில் ஆரம்பிக்கும் ஒரு பிரபல பாடலும் உண்டு.

அந்தக் கற்குகைக்குள் வந்த ஒரு லிவர்பூல் ஆதரவாளன் ஒருவன், அந்த வாக்கியத்தைச் சுவரில் எழுதிவிட்டுச் சென்றிருக்க வேண்டும். இந்த யாத்திரைப் பயணத்தில் எவரும் தனித்து நடப்பதில்லை. அத்தனை சக யாத்திரிகர்கள் உங்களைச் சுற்றி நடந்து கொண்டிருப்பார்கள். பேபேயை அழைத்துக் காண்பித்தேன். சிதம்பரச் சக்கரத்தைப் பார்த்தது போல் பார்த்தார். அவருக்கு அது புரியவில்லை.

அன்று எம்முடன் இன்னாரு ஸ்பானிஷ் யாத்திரிகரும் இணைந்து கொண்டிருந்தார். அவருக்கு ஆங்கிலம் கரைபுரண்டு ஓடியது. எனவே, பேபேக்கு லிவர்பூல் கழக வாசகத்தின் அர்த்தத்தைப் போதிக்க நேரம் எடுக்கவில்லை.

அதைக் கேட்டவர்.. "நான் ஓர் அட்லேடிகோ மட்ரீட் கழக ஆதரவாளன், உனது கழகத்தை அறவே வெறுக்கிறேன். உனது கழகத்திற்குக் காற்பந்து விளையாடவே தெரியாது" என்றார் நக்கலாக. எனக்குச் சூடாகியது.

நானும் பதிலுக்கு, "உனது கழகத்திற்கு காற்பந்தாட்டம் என்றால் என்ன என்றே தெரியாது. மட்ரீட் நகரத்தில் ரியல் மட்ரீட் கழகம் மட்டுந்தான் பெயர்போனது. உனது கழகம் அவர்களுடன் ஒப்பிடுகையில், மவுசு குறைந்தது. இன்றுதான் உனது கழகத்தைப் பற்றிக் கேள்விப்படுகிறேன்" என்று எள்ளி நகையாடும் குரலில் கூறினேன். யாருக்குத்தான் தனது கழகத்தை மட்டம் தட்டுவதைப் பொறுக்க முடியும்?

"சரி சரி.. வெய்யில் தாங்க முடியவில்லை. நீயும்



ஜேர்மனிய நண்பர்கள்

கொதிக்கிறாய். வா ஒரு பியர் குடித்து அனைத்தையும் தணிப்போம்" என்று சமாதானம் பேசினார்.

மறுநாளும், புதிய நண்பர் எம்முடன் நடந்து கொண்டிருந்தார். அன்று மாலை ஓர் உணவகத்தில் நாங்கள் மூவரும் உட்கார்ந்திருந்தோம். உடல் களைத்துக் கிடந்தது. நடக்கத் தொடங்கி சில நாட்கள் ஆகிவிட்டதால், பேபேயால் உடல் உபாதைகள் இன்றி நடக்க முடிந்தது. மங்கிய விளக்குகளின் ஒளியில் சாரளங்களுக்கு அருகில் உட்கார்ந்திருந்தோம். மாலை நேரத்து கருக்கல் ஊரை மூடிவிட்டிருந்தது.

பரிசாரகன் வந்து "குடிப்பதற்கு ஏதேனும் எடுத்து வரவா?" என்றபடியே உணவுப் பட்டியலை மூவருக்கும் தந்தார்.

பேபே, என்னைப் பார்த்து, "உனக்கு இன்று தெய்வீக பானமொன்றை அறிமுகப்படுத்துகிறேன். எனது நாட்டின் அற்புதங்களில் ஒன்று அது.." என்றுவிட்டு பரிசாரகனிடம், "மூன்று பச்ரான் பானங்கள்" என்றார். பரிசாரகன் சிவப்பு நிறத்தில் ஒரு பானத்தை எடுத்துவந்தார்.

தனது கிண்ணத்தைக் கையில் எடுத்த பேபே, என்னைப் பார்த்து, தனது பெருவிரலையும் ஆட்காட்டி விரலையும் இணைத்து உதட்டில் வைத்து "ம்ம் மா" சொல்லி பச்ரான் பானத்தின் பராக்கிரமத்தை அறிமுகப்படுத்தினார்.

உரையாடிய படியே, அன்றைய தினம் மறுநாள் பயணத்தைத் திட்டமிட்டுக்கொண்டிருந்தோம். நாளை 35 கிலோமீற்றர்கள் நடக்க வேண்டும். காலை ஏழரைக்கு ஆரம்பித்தால் மூன்று மணிபோல் இலக்கை அடையலாம் என்று தீர்மானித்துக்கொண்டோம்.

மதுசாரத்தில் பல வகைகள் உண்டு. குடித்தவுடன் சுர்ர்.. என்று போதை தலைக்கு ஏறுவது ஒரு வகை. அனுபவமான குடிகாரனுக்கு இலகுவில் ஏறாத போதைபோன்று மெதுமெதுவாக போதையேறுவது இன்னொரு வகை. ஏறிய போதை உடன் இறங்கும் மது அல்லது பல மணிநேரம் போதையை தக்கவைத்திருக்கும் மது என்று பலவகைகள் இருக்கிறதல்லவா?

பச்ரான் உடனேயே தனது விளையாட்டைக் காண்பித்து, நெடுநேரம் விளையாடிக் கொண்டிருக்கும் வகையானது. மது மனிதர்களை இளகச் செய்யும். கனத்து, புதைந்திருக்கும் இரகசியங்களையும் மிதக்கச்



யாத்திரையின்போது உயிரிழந்த ஒருவருக்கான அஞ்சலி

செய்யும் அல்லவா? பேபே இப்படி ஆரம்பித்தார்.

“என்னை ஓர் அனுபவமான யாத்ரிகன் என்றோ, நான் நீண்ட தூரம் நடந்திருக்கிறேன் என்றோ நீ நினைக்கக் கூடாது. நீ என்னை முதன் முதலாகச் சந்தித்தபோது நான் நடக்கத் தொடங்கி ஒரு மணிநேரமும் ஆகியிருக்கவில்லை. எனக்கு நடந்து பழக்கமில்லை. அதுதான் நடந்து ஓரிரு மணிநேரத்தினுள் காலில் நீர்க்கட்டி வந்தது.”

நான் நெற்றியில் கையால் அடித்துக்கொண்டேன். இருவரும் சிரித்தார்கள்.

பேபே பரிசாரகனை அழைத்து மீண்டும் மூன்று விரல்களைக் காண்பித்தார். மூன்று சிவப்புக் கிண்ணங்கள் வந்தன.

“நான் மட்ரீட் நகரத்தில் பிறந்து வளர்ந்த மனிதன். பிரபல வழக்கறிஞர் கம்பனியில் புகழ்பெற்ற வழக்கறிஞன், உயர் பதவியில் இருந்தவன். என் காலின் கீழ் வாழ்வு கொட்டிக்கிடந்தது. தேவையான அளவு பணம், சமூகத்தின் அனைத்துஇடங்களிலும் தொடர்பு, அந்தஸ்து, மனைவி.. என்று வாழ்ந்திருந்தேன்.

வாழ்வு கொண்டாட்டமாய் இருக்கும்போது, வேலை, வேலை என்று வேலையே கதி என்று கிடந்த நாட்களில், சப்தமற்ற கால்களுடன் நரகம் எனது வீட்டின் கதவைத் தட்டியிருந்ததை, கால்களில் கொட்டிய பணமும் புகழும் வசதி வாய்ப்புக்களும் மறைத்தது. ஓராண்டுக்குள் வாழ்வு புரண்டு விவாகரத்தாகி தனித்துப்போனேன்.”

மேசையில் இருந்த ஆலீவன் காய்களில் இரண்டை எடுத்து வாய்க்குள் போட்டுக்கொண்டார். நானும் ஒன்றை எடுத்தேன்.

“வேட்டைக்கு செல்பவன் அஞ்சினால் என்ன நடக்கும்? பெண்கள் விடயத்தில் நான் மிகவும் வெட்கப்பட்ட மனிதன். அதனாலோ என்னவோ 45 வயதுவரை திருமணம் நடக்கவில்லை.

தனிமையில் அழுந்திக் கிடந்த நாட்களில் அல்முதேனா (Almudena) தேவாலயத்திற்கு தினமும் செல்வேன். அது மட்ரீட் நகரத்தின் பெரிய தேவாலயம்.

ஒரு நாள், முழந்தாளிட்டு செபித்துவிட்டு நிமிர்ந்தபோது, வெள்ளை நிற லேஸ் துணியில் முக்காடிட்டு, முழந்தாளிட்ட நிலையில் ஒரு பெண்ணை எனக்கு அருகில் கண்டேன். என்னைப் பார்த்துப் முறுவலித்தாள். வாய் திறக்காத அந்தப் புன்னகையில் மயங்கிப் போனேன்.



தேவாலயத்திற்கு வெளியே தர்மம் கேட்கும் ஒரு மூதாட்டி

பெற்றோரிடம் இருந்து வெளியேறிய நாளில் இருந்து தனியே வாழ்ந்தவன் நான். அந்நாட்களில் உறக்கம் நிம்மதியாக இருக்காது. ஆழ்ந்த உறக்கத்திலும் ஒரு ஏக்கம் என்னுடன் இருந்தது. முதன்முதலில் அவள் என் மார்பில் உறங்கியபோது நான் என்றுமில்லாத கனவுகள் அற்ற நீண்ட தூக்கத்தினை அனுபவித்தேன்.

வறண்ட நிலத்தில் விழும் மழைத்துளியைப் போல் ஓர் ஆணின் அனைத்துத் துயரையும் உறிஞ்சி எடுப்பதற்கு ஒரு பெண்ணால் மட்டுமே முடியும். பெண்ணின்றி ஓர் ஆணால் வாழ முடியாது. பெண்களிடம் இயற்கையாவே ஆற்றுதல்படுத்தும் குணம் இருக்கிறது. தாய்மையின் ஒரு வடிவம் அது.

நீரில் அமிழ்ந்து கொண்டிருப்பவன் கையில் எது கிடைத்தாலும் அதைப் பெரும் நம்பிக்கையோடு பற்றிக்கொள்வதில்லையா? அதுபோன்று, தனித்திருக்கும் மனிதர்களும் கிடைக்கும் அனைத்தையும் வாழ்வு மீண்டுவிட்டது என்ற நம்பிக்கையில் பற்றிக்கொள்கிறார்கள். அதுபோல நானும் அவளைப் பற்றிக்கொண்டேன்.

இன்னொருவர் மீது அளவற்ற அக்கறையைக் காண்பிப்பதும், அவருக்கான அனைத்தையும் தன் தேவைபோல் நினைத்துத் தன்னையே கொடுப்பதும், சதா அவர்களுக்கான நலனை நினைத்திருப்பதும் ஒரு கலை. எல்லோருக்கும் அது வாய்ப்பதில்லை. அவளுக்கு ஒரு சிறு சங்கடமும் ஏற்படக்கூடாது என்று மனது அடித்துக்கொள்ளும். அதற்கான எதையும் செய்யத் தயாராக இருந்தேன். அவள் துயருற்றால் அதை எனது துயர் போன்று உணர்ந்தேன்.

மாசற்ற தூய அன்பு மட்டுமே அப்படியான அளவற்ற அக்கறையை எப்போதும் கொடுத்துக்கொண்டே இருக்கும் என்று இப்போதும் நம்புகிறேன்.

மனித மனங்கள் வித்தியாசமானவை. ஒவ்வொருவரும் அன்பு காண்பிக்கும் விதம் மனிதருக்கு மனிதர் வேறுபடும் அல்லவா? அதுபோன்று மின்னலைப் போன்று தோன்றும் அன்பு, காலப்போக்கில் மங்கி அகன்றும் போகும்.

கொடுத்த பேரன்பின் சிறுபகுதியையேனும் உரிமையுடன் மீளவும் எதிர்பார்ப்பது முதிர்ச்சி அற்ற மனதின் வெளிப்பாடு. அப்போது மனங்கள் பிரிந்துபோகின்றன. அது நடந்தது.

ஆணுக்கும் பெண்ணுக்குமான அன்பில் கொடுப்பதை எதிர்பார்ப்பதானது, அன்பு என்னும் நிலையைக் கடந்து பண்டமாற்று நிலை என்பதைக் காலம் கடந்து புரிந்துகொண்டேன்" என்றுகூறிவிட்டு.. பரிசாரகனை நோக்கி கையை மீண்டும் உயர்த்தினார்.

அவர் மேலும் மூன்று சிவப்புக் கிண்ணங்களை எடுத்துவரும்போது, அவரின் பின்னே இன்னுமொருவர் சில்லுகள் பூட்டியதொரு சிறிய மேசையில் நன்குவாட்டிய மாட்டின் தொடையிறைச்சி, பொரித்த உருளைக்கிழங்கு, அவித்த மரக்கறிகள், குளிர்நீர் என்பவற்றை எடுத்து வந்து எங்களுக்குப் பரிமாறினார்.

பேபே இறைச்சியை, பூனை பிரியத்துடன் தனது குட்டியை மணந்து பார்ப்பதுபோல் மணந்து பார்த்தார். ஆலிவ் எண்ணையும் ஆப்பிள் சிட்டரும் சேர்த்து முள்ளுக் கரண்டியால் இறைச்சியைக் குத்திப் பிடித்து, கத்தியால் ஒரு துண்டைவெட்டி எடுத்து வாய்க்குள் வைத்துவிட்டு, கண்ணை மூடி.. மெய்மறந்து உண்ணத் தொடங்கியபோது, அவரது மூடிய வாய் ஆலிங்கனத்தில் உச்சம் கண்டதுபோன்று ம்...ம்...ம்.. என்று ஒலியெழுப்பியது.

மற்றைய நண்பரும் நானும் ஆளையாள் அர்த்தமாகப் பார்த்துச் சிரித்துக்கொண்டோம்.

உண்மையில், உணவின் ருசி அபரிமிதமாகத்தான் இருந்தது. பேபே எழுப்பிய சிருங்கார ஒலி அர்த்தமுள்ளது என்பதைப் புரிந்துகொண்டேன்.

"நான் பெரும் சாப்பாட்டுப் பிரியன்" என்றார் பேபே.



அவர் வாயை மூடுவதற்கு முன்பே, “அது உண்மைதான். ஒரு பெண்ணைப் போலத்தான் உணவையும் ருசிக்கிறீர்கள்.”

“இலங்கையைச் சேர்ந்தவர்கள் மோசமான அவதானிகள் போல்” என்றார்.

சேர்ந்து சிரித்தோம்.

மீண்டும் பரிசாரகனை நோக்கி கையைக் காண்பித்தார்.

இவரிடம் வந்த பரிசாரகனிடம் எதையோ சொல்லியனுப்பினார். எனக்கு மொழி புரியவில்லை. நான் வாட்டிய இறைச்சியில் கவனமாயிருந்தேன்.

மேலும் ஒரு முறை பச்ரான் பானம் எமக்குள் இறங்கியது.

அப்போது சமையலறை உடையுடனும் தலையில் வெள்ளைத் தொப்பியுடனும் ஒரு மனிதரை அழைத்து வந்தார் பரிசாரகன்.

அந்த மனிதரைப் பார்த்தபடியே, அன்றைய தினம் இரண்டாம் தடவையாக தனது பெருவிரலையும் ஆட்காட்டி விரலையும் இணைத்து உதட்டில் வைத்து “ம்ம் மா” என்ற பேபே, ஸ்பானிஷ் மொழியில் எதையோ சொன்னபடி. உட்கார்ந்திருந்த நாற்காலியைப் பின்னால் தள்ளி, எழுந்து நின்று, முதுகை வளைத்துத் தலையை சாய்த்து நிமிர்ந்தார். அதன்பின் கைதட்டினார்.

பேபேக்கு வெறி தலைக்கேறி, நிதானம் தப்பிவிட்டது என்று நினைத்தேன்.

அருகிருந்த மற்றைய நண்பர், எனது காதுக்குள், “உணவு தயாரித்தவரை பாராட்டினார்” என்ற பின்புதான் அவர் எழுந்து முதுகு வளைத்து தலைசாய்த்து, கைதட்டியது நன்றி சொல்லவே என்பதைப் புரிந்துகொண்டேன்.

அதி ருசியான உணவு தயாரித்தவரை அழைப்பித்து மரியாதை செலுத்திய பேபேயின் பெருந்தன்மையை நானும் கற்றுக்கொள்ளவேண்டும் என்று நினைத்துக்கொண்டேன்.

பாராட்டைப் பெற்றவர் தனது வலது கையை இடது மார்பில் வைத்து தலைசாய்த்து, “கிராசியஸ், கிராசியஸ்” என்று நன்றி கூறி விடைபெற்றதும், விட்ட இடத்தில் இருந்து கதையைத் தொடர்ந்தார் பேபே.

“வாழ்வின் சுவராஸ்யமே அது எப்போதும் கற்பித்துக்கொண்டே இருப்பதே. அன்பு என்பது



ஒரு காலைப் பொழுது

கொடுக்கப்படும் ஒரு வஸ்துவே அன்றி, எதையும் மீள எதிர்பார்ப்பதல்ல. காலங்கடந்த ஞானம் அது. இருந்தாலும், பேரன்பின் இழப்பு என்னைப் பெரும் அயர்ச்சிக்குள் தள்ளியது. நாட்கள் வாரங்களாகி, மாதங்களாகி கடந்துபோயின. வாழ்வு நின்று போயிற்று.

அவளிடம் ஒரு யாசகனைப்போல் கெஞ்சினேன், மன்றாடினேன். "உன்னில் எனக்கு அன்பு இல்லை" என்றாள். இருந்தாலும், பல மாதங்கள் காத்திருந்தேன். தொடர்ந்து தொடர்புகொண்டேன், அழுதேன், பித்தன் போலானேன். அந்த அன்புக்காக நான் படும் வலியை வார்த்தைகளில் அடக்கிவிட முடியாது.

இத்தனை வயதிலும் ஒரு பெண்ணின் அன்புக்காக கெஞ்சிக் கொண்டிருப்பதை நினைத்து எனக்கு என்னில் வெறுப்பாக இருந்தது. இருந்தாலும் அவள் மீதான பேரன்பு குறையவே இல்லை.

எது உனக்குரியதோ அது உன்னிடம் தங்கும். எதையும் வற்புறுத்தி வாழ்வில் நிறுத்தி வைத்துக்கொள்ள முடியாது என்பது புரிந்திருந்தாலும், காதலுற்ற மனம் அதை உள்வாங்கிக் கொள்வதாயில்லை.

பத்து நாட்களுக்கு முன், வாழ்வு மங்கி, இனி மீளமுடியாது என்று உழன்ற ஒரு மாலைப் பொழுதில், அவளைச் சந்தித்த அதே அல்முதேனா தேவாலயத்தில் மண்டியிட்டு செபித்துக்கொண்டிருந்தபோது, ஒரு குரல், 'சாண்டியாகோ டி கம்போஸ்டெலாக்குப் போ' என்றது.

ஒரு வாரத்திற்கு முன் பணிவிடுத்தல் கொடுத்தேன். இருந்த செல்வாக்கின் காரணமாக உடனயாக பணிவிடுப்பு கிடைத்தது. வீட்டையும் வாகனத்தையும் விற்பதற்கு ஆதனத் தரகரிடம் கொடுத்தேன். அவை விற்கப்பட்டுவிட்டன என்று இன்று செய்தி கிடைத்திருக்கிறது.

முதல் நாள் நடந்து களைத்து, நீர்க் கொப்பளங்களுடன் குந்தியிருந்தபோதுதான் நீ என்னைக் கண்டாய். இந்தப் பாவியுடன் நடக்க வேண்டும் என்று உனக்கு விதிக்கப்பட்டதன் பயன்தான், இன்று உனக்கு எனது கதையைச் சொல்லியிருக்கிறேன்" என்றார்.

பச்ரான் என்னைக் காற்றில் தூக்கியிருந்தது. நான் அவரைப் பார்த்துத் தோழைமையுடன் புன்னகைத்தேன் என்றுதான் நினைக்கிறேன்.



சாண்டாண்டர் (Santander) நகரத்தின் தேவாலயத்தில் 'First Communion' நிகழ்விற்காக தயாராக நின்றிருந்த தேவதை

மற்றைய நண்பர், "நான் புறப்படுகிறேன். யாத்திரை சிறக்கட்டும்" என்று தனது கிண்ணத்தை உயர்த்திப் பிடித்தார்.

எமது கிண்ணங்கள் மோதிக்கொண்டன.

அவர் எழும்பி நடந்தார். வெளியேறும் கதவைப் பரிசாரகன் அவருக்குக் காண்பிக்க வேண்டிய நிலையை பச்ரான் ஏற்படுத்தி இருந்தது.

அவர் சென்றதும் பேபே, பரிசாரகனை நோக்கி கையை உயர்த்தி... "இருப்பதில், மிக உசத்தியான இனிப்பு உணவை எடுத்து வாருங்கள்" என்றார்.

சற்று நேரத்தில் சீஸ் கேக்கும் கப்புச்சீனோ கோப்பியும் வந்தது.

மீண்டும் கையை உயர்த்தி, விரலால் எழுதுவது போன்று காண்பித்து, உணவுக்கான பற்றுச்சீட்டைத் தருமாறு காண்பித்தார்.

அதைக் கண்ட நான், "இன்று கொடுக்கிறேன்" என்றேன்,

"நீ நாளைக்கு கொடு. இன்னும் பல நாட்கள் நாம் இணைந்து நடக்கவேண்டும். எனவே, இன்று எனது முறை."

அவரது வேண்டுகோளை மறுக்க முடியவில்லை.

பரிசாரகன், கட்டணத் தெகையை எழுதி எடுத்துவர முன்னமே, பேபே தனது 'அமெரிக்கன் எக்ஸ்பிரஸ் கோல்ட் கார்ட்'-ஐ மேசையில் வைத்தார். திரும்பி வந்த பரிசாரகன் இரண்டு கிண்ணங்களில் பச்ரான் எடுத்து வந்து, "இது உங்களுக்கு எங்கள் உணவகத்தின் அன்பளிப்பு" என்றார்.

நான் ஏற்கனவே காற்றில் நடப்பதுபோன்று உணர்ந்து கொண்டிருந்தேன். பேபே பறந்துகொண்டிருந்தார்.

"எனது அருமை இலங்கை நண்பனே! எனது மட்ரீட் நகரத்து வாழ்வு முடிந்து விட்டது. அவள் இல்லாது அங்கு வாழ விரும்பவில்லை. நகரத்தின் அனைத்து இடங்களிலும் அவளுடனான ஏதோ ஒரு நினைவு ஒட்டிக்கிடந்து வலியைத் தருகிறது.

ஒரு கிராமத்தில், சுற்றாடலைப் பாதிக்காத, மறுசுழற்சி முறையிலான ஒரு பண்ணையொன்றை அமைத்துக்கொண்டு அமைதியாக வாழப்போகிறேன். இந்தப் பெரிய உலகில் எனக்கென்று ஒரு சிறு இடம் இருக்காமலா போகிறது? சிலவேளை எனது பேரன்பு என்னைத் தேடி அங்கு வரலாமல்லவா?" என்று அவர் முடித்தபோது..

"பேபே.. எனது மொழி உலகின் மிகப் பழைய மொழிகளில் ஒன்று. 'நல்ல மாட்டுக்கு ஒரு சூடு' என்று எங்களிடம் பழமொழி ஒன்று இருக்கிறது. முட்டாளே! பெண்ணின்றி வாழமுடியாது. அவள் நீர் போன்றவள். குளிரவும் செய்வாள், கொதிக்கவும் செய்வாள். அவளைக் கையாள்வதுதான் கலை.." என்றபோது எமது நாக்குகளில் சொற்கள் உருண்டு பிரண்டு தடக்கித் தடுமாறத் தொடங்கியிருந்தன..

பேபே.. முடிந்து விட்ட சீஸ் கேக் இருந்த சிறிய பீங்கானை கரண்டியால் வழித்து வழித்து நக்கிக்கொண்டிருந்தார்.

"அருமை நண்ப.. பேபே!" என்று நான் உரையாற்றத் தொடங்கினேன். எனது வாழ்வின் கதையை நான் முடித்தபோது, "தோழனே.. உலகில் ஒரே முகச்சாயலில் ஏழுபேர் இருக்கிறார்களாம்" என்றார் பேபே.

அன்றிரவு, உணவகம் மூடும்வரையில் பேபே சுந்தரத் தமிழிலும் நான் ஸ்பானிஷ் மொழியிலும் மாறி மாறி வாழ்வு பற்றி சம்பாஷித்துக் கொண்டிருந்தோம்.

**சஞ்சயன்** <adsayaa@gmail.com>

# வெய்யிலின்
# கொஞ்சம் மனது வையுங்கள் தோழர் ஃப்ராய்ட்

**ந. பெரியசாமி**

கவிதைக்கு விதிவிலக்குகள் ஏதுமில்லை; எவரையும் கேள்வி கேட்கும், கேலிக்கும் உள்ளாக்கும். உளப்பகுப்பாய்வு, பாலியல், கனவு சார்ந்த தன் தத்துவங்களால் உலகத்தாரின் கவனத்தை ஈர்த்த ஃப்ராய்டை எள்ளல் தன்மையோடு அணுகியிருக்கும் கவிதைகளைக் கொண்டிருக்கிறது, 'கொஞ்சம் மனது வையுங்கள் தோழர் ஃப்ராய்ட்' கவிதை தொகுப்பு.

'பிறந்த குழந்தைக்கு உடல்நிலை சரியில்லாது போக, இரண்டு நாட்களாக தாய்ப்பால் எடுக்க முடியாத சூழல். இவரை குடிக்கச் சொன்னால் செய்யக்கூடாததை செய்யச் சொன்னதை போன்று அவ்வளவு தயங்கிட வலி உயிர்போனது. பின் என் அக்கா வந்து பீச்சிட வீடு முழுமையும் அப்படியொரு பால் மணம். இப்ப கூட அந்த வாசம் இந்த வீட்டில் இருப்பதை உணருவேன்' என கண்களில் நீர் வழிய உரையாடிய தோழியை நினைவு கூறியது தொகுப்பின் முதல் கவிதையான 'ஒரு பூ பூத்துச்சாம்...' இந்த கவிதையில் வரும் 'தொழுவத்து சாண வாடைய மீறி பால் மணக்குமாம்' வரி, மகன் கல்லூரியில் படிக்கும் காலம் கடந்தும் பால்கட்டும் வலியை இன்னமும் கண்ணில் வைத்திருக்கும் அனுபவம் பெண்களுக்கானது மட்டும்தான்.

வெக்கையின் கூடாரம் தொழிற்சாலைகள். சுயநலமே உடலாய்க் கொண்ட அதிகாரிகளின் வெக்கையோ அதனினும் கொடியது. மனிதர்கள் மட்டுமல்ல இயந்திரங்களும் தவறு செய்யும். இயந்திரமாக நிற்கும் தொழிலாளிகளே எல்லாவற்றிற்குமான பொறுப்பாளி. அதிகாரத்திற்கு கைகாட்ட தோதாக எப்பவும் இருத்தி வைக்கப்படுபவர்கள். அங்கு எல்லாவற்றிலும் ஒரேமாதிரியான சுழற்சிதான். பணியின்போது நீண்ட பாம்பு வந்துவிடுகிறது. எல்லோரும் பதறி சூழ்ந்திருக்க, ஒரு தொழிலாளி அதை அடிக்க 20 எம்.எம். ராடு ஒன்றை எடுக்கச் சொல்கிறார். ஓடிப்போய் எடுப்பவனும் தேடி 20 எம்.எம். ராடாக எடுத்து வருகிறான். எதோவொரு கம்பியை எடுத்து பாம்பை அடிக்கலாம்தானே. ஆனால், தொழிற் சார்ந்த புத்தி யாதார்த்தத்தை அனுமதிப்பதில்லை; எல்லாவற்றையும் ஒழுங்குக்குள் அடைப்பது. டீ அருந்த,



சாப்பிட, கழிவறைச் செல்ல என நேரமும் கன்வேயர் பெல்ட்தான். கன்வேயர் சிஸ்டத்தில்தான் சிந்தனையும் இயங்கும். 'நுரையீரல்களின் பாடல்', 'பாட்டாளிகளின் சூதாட்டம்', கவிதைகள் தொழிலாளர்களுக்கான ஆறுதல்.

> யாரும் எதிர்பார்த்திராத தருணத்தில்
> ஒரு குழந்தை கன்வேயர் பெல்ட்டிலிருந்து
> நம்பிக்கையோடு தாவிக் குதிக்கிறது.

இக் குழந்தைதான் தொழிலாளர்களின் வாழ்வை நகர்த்திக் கொண்டிருக்கிறது. தன் பிஞ்சு விரல்களாக் காய்ப்பேறிய மனதை மெதுமெதுப்பாக்குகிறது.

வாசிப்பிலோ நினைவிலோ கிடைத்திடும் ஈர்ப்பு மிக்க சொல்லை தம் படைப்புகளில் பயன்படுத்தும் ஆர்வம் எல்லோருக்கும் ஏற்படுவதுண்டு. பெரும்பாலானவர்களிடம் துருத்திக்கொண்டு தெரியும். ஆனால், வெய்யில் பயன்படுத்தும் இடங்கள் அத்தனை பொருத்தப்பாட்டோடு இருந்து ஆச்சரியம் கொள்ளச்செய்யும். 'தீம்பிழி எந்திரம் பந்தல் வருந்த' எனும் பதிற்றுப்பத்து பாடலில் வரும் தீம்பிழி, 'மீ எனும் பனந்தீம்பிழி' எனும் கவிதையில் பொருத்தமாக செயல்பட்டிருக்கு.

> தூமை தூமை என்றுளே துவண்டு அலையும் ஏழைகாள்
> தூமையான பெண்ணிருக்க தூமைபோனது எவ்விடம்
> ஆமைபோல மூழ்கிவந்து அநேக வேதம் ஓதுநீர்
> தூமை திரண்டுருண்டு சொற்குருக்கள் ஆனதே.

எனும் சிவவாக்கியர் பாடல்களும், தூமையை நல் விளைச்சல் வேண்டி நிலங்களில் தூவிய முன்னோர்கள் வாழ்ந்த இந்நிலத்தில், தூமை என பொதுவெளியில் பேசினால் பதற்றம் அடைபவர்களையும் பார்க்கிறோம், ஏன் இன்னும்கூட கடைகளில் நாப்கீன் கேட்டால் நாளிதழில் சுற்றி கருப்பு நிற நெகிழிப் பையில் மறைத்து கொடுப்பதும் தொடர்ந்துகொண்டிருக்கிறது. இச்சூழலில் தூமையை அழகியலோடு 'வெள்ளி வீதியாரின் நாப்கின்' கவிதையில் காட்சிபடுத்தியிருக்கிறார் வெய்யில்.

தொகுப்பிலிருக்கும் 'மத்தியானம்' கவிதை ஆண் வாயை யோனியாக மாற்றம்கொள்ளச் செய்து தூமையின்

கொண்டாட்டச் சூழலை வெளிப்படுத்துகிறது.

கிழவன் நல்ல மனுஷன்
பிராயத்தில்
கிழவியோட தீட்டுத்துணிகளை
ஊருக்குத் தெரிய
ஆசையா ஆத்துல அலசிக் கொடுப்பான்
கொஞ்சம் குசும்பனும் கூட
நேத்து வாய் நிறைய்ய வெத்தலயக் குதப்பிக்கிட்டு
“இங்க பாருபுள்ள.... என் வாயெல்லாம் தூமை”
க்கு சிரிக்கான்.
வெக்கத்துல கிழவிக்கு நின்னுபோன தூம
பொங்குறமாதிரி இருந்திச்சாம்!

இக்கவிதை தோழர்.ஃப்ராய்டின் ஒவ்வொரு ஆணுக்குள்ளும் பெண் தன்மையும், ஒவ்வொரு பெண்ணுக்குள்ளும் ஆண் தன்மையும் இருக்கும் எனும் கூற்றை நினைவுபடுத்துகிறது.



உடல்களை தாள்களாக்கி, குருதியை எழுதும்மையாகமாற்றி,மாசானவரலாறு எழுதப்பட்டுக் கொண்டிருக்கிறது. அதன் பெருமிதங்களை காட்சிபடுத்த, இரண்டு மேடுகளை வரைந்து, இரகசியங்களை, சாதியை, மதத்தை காப்பற்றும் வரைவுகளை சிறு பிளவில் காலகாலமாய் சொருகிக்கொண்டே இருக்கும் வாதையை காட்சிபடுத்தி வெட்கம்கொள்ளச் செய்கிறார் ‘அறம் என்றொரு சொல்’ கவிதையில்.



சிந்தனைகள், தத்துவங்கள் எல்லா நிலவியல் சூழலுக்கும் பொருத்திப்போகும் தன்மையோடு இருந்துவிடுவதில்லை. தொடர் சிந்தனையும் மாற்றமும் நிகழ்த்திக்கொண்டே இருக்கவேண்டிய தேவை இருக்கிறது. இதன் விளைவாகவே சில தத்துவங்கள் எள்ளல்தன்மைக்கு இடம்கொடுக்கவேண்டியதாகிவிடுகிறது. மன ஆற்றல்களின் தன்மையை அவை ஏற்படுத்தும் மகத்தான விளைவுகளை புரிந்துகொண்ட ஃப்ராய்டை கவிதைகள் கேள்விக்குட்படுத்துகின்றன. அடிவயிற்றுப் பிரச்சினைக்கான போராட்டமே தீராது தொடரும் சூழலில் நமக்கு அதன் கீழ் இருக்கும் மறையுறுப்புக்கான பிரச்சினைகள் குறித்த தத்துவங்களை கேலிக்குரியதாக்குகின்றன தொகுப்பிலிருக்கு கவிதைகள்.

புற வாழ்வுச் சிக்கலைப்போக்கும் சிந்தனையை ஏற்றுக்கொள்ளும் நாம், உளம் சார்ந்த பிரச்சினைக்கான சிந்தனையையும் தேவைக்கேற்ப ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டியிருக்கு. கனவுத் துன்புறுத்தல், மூளையை பாதிக்கும் வாழ்வியல் அனுபவங்கள், ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ளும் களமாக கனவை கண்டடைதல், எல்லா பிரச்சினைகளையும் மனம் திறந்து பேச வைப்பதன் மூலம் தீர்க்கலாம் எனக் கூறிய மிஸ்டர் ஃப்ராய்ட், நண்பர் ஃப்ராய்ட், ஆய்வாளர் ஃப்ராய்ட், டாக்டர் ஃப்ராய்ட் என அழைப்பதை போன்று தோழர் ஃப்ராய்டு என்றும் அழைக்கலாம். தொகுப்பிலிருக்கும் ஃப்ராய்டு குறித்த கவிதைகள் வெவ்வேறான யோசிப்புகளை நம்முள் ஏற்படுத்துகின்றன.

வேர்களுக்கும் மண்ணுக்குமான பிணைப்பு நமக்கும் இசைக்கும் உண்டு. துயரான காலங்களில் மடிதரவும், தனிமையில் தோழிகளை உடனிருக்கச் செய்யவும், கொண்டாட்ட காலங்களில் உடலில் சிறகு முளைக்கச் செய்யவும், மது அருந்துகையில் கோப்பையை நிறைத்துக்கொண்டும் என நம்முள் வெவ்வேறான மாயங்களை நிகழ்த்தி பார்த்துக் கொண்டிருப்பதை காட்சிபடுத்தியுள்ளன ‘காற்றெல்லாம் உந்தன் கீதம்’ கவிதைகள்.

விபரம் அறிந்த நாள் தொட்டே காதல் கதைகளை கேட்டும், கவிதைகளை வாசித்தபடியும் இருக்கின்றோம். எல்லாமே நெருக்கமாக இருந்துவிடுவதில்லை. தங்காது தகவல்களாக போய்விடுவதும் உண்டு. சிலருடையது நெருக்கமனதாகிவிடும். வெய்யிலின் காதல் கவிதைகளுக்கு அத்தன்மை உண்டு. தன்னுள்ளே மிதந்து கிடக்கச் செய்யும் அழகிய நீரோடை. ‘நம் காதலுக்கு வடி நீரின் ருசி’, ‘என் சீட்டுக் கட்டில் எல்லாமே ராணிகள் / எல்லோருகமும் உன் முகம்’, ‘என் ராத்தேவை ஒரு கவளக் காமம்’, ‘அழகழகான சொற்களை ராத்திரிகளில் உனக்காக நெய்தேன்’ என நிறைய்ய சொல்லிக்கொண்டேபோகலாம். வானில் தெரியும் நட்சத்திரங்கள் காதலிகளால் உள்ளங்கையில் வரையப்பட்டவை என்பதை வாசிக்கையில் அவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கிறது.

பனைவேர், பனம் பூ, பனங்கிழங்கு, பனம்பழம், பதனி, நொங்கு, ஊறிக் கொண்டிருக்கும் கள்ளென மொழியின் நிலத்தில் தொடர்ந்து பனைமரத்தை நட்டுக்கொண்டே இருக்கும் வெய்யிலின் கவிதைகள் பதரற்ற நெல்மணிகள்.

**“ந. பெரியசாமி”** na.periyasamy@gmail.com

---

கொஞ்சம் மனது வையுங்கள் தோழர் ஃப்ராய்ட் (கவிதை தொகுப்பு) – வெய்யில்; விலை ரூ. 80; வெளியீடு: மணல்வீடு, தொலைபேசி: +91 98 9460 5371; மின்னஞ்சல்: manalveedu@gmail.com

சாயாவனம்

# சரிந்த குடும்பத்தின் புலம்பெயர்வில் எரிந்தவனம்

**சந்தியா நடராஜன்**

எல்லைக் கோடுகள் அற்ற உலகைக் கனவு காணுமாறு நமக்கு அழைப்பு விடுக்கிறார், ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தின் புலம்பெயர்வு பற்றிய ஆய்வாளர் பிரிட்ஜட் அண்டர்சன். எல்லை விதிகளை அகற்றினால் மனித சமூகம் மேம்படும் என்பது அண்டர்சனின் கணிப்பு. அப்போது சமன் குலையாத சமூகம் கட்டமைக்கப்பட்டு ஒரு செயல்படுத்தக்கூடிய உலக அரசியல் உருவாகும் என்று தெரிவிக்கிறார்.

அகிலமெங்கும் மக்கள் அவதியுற்றும் அகதிகளாயும் கண்டம் விட்டுக் கண்டம் பாய்ந்து செல்கிறார்கள். புலம்பெயர்வு என்பது வாழ்க்கையின் ஒரு வழித்தடமாக மாறிவிட்டது. புலம்பெயர்வு என்கிற கருத்தாக்கம் மானுடத்தின் பிரபஞ்ச உரிமை என்று அறிவிக்க வேண்டிய காலக்கட்டத்தில் நாம் வாழ்கிறோம். ஆனால், வல்லரசுகள் மனிதத்தை குலைத்து எல்லைகளில் சுற்றுச் சுவர்களை, காப்பரண்களை கட்டுவதிலே மும்மரமாகச் செயல்படுகின்றன. பெர்லின் சுவர் தகர்க்கப்பட வேண்டும் என்று முழங்கிய அமெரிக்க அதிபர் ரீகன் வாழ்ந்த வெள்ளை மாளிகையில் காட்சிகள் மாறி மெக்ஸிகோ சுவர் எப்பாடு பட்டேனும் எழுப்பப்பட வேண்டும் என்ற குரல் ஒலிக்கிறது.



மாயவரத்திலிருந்து தனது பதின்பருவத்தில் சென்னைக்கு இடம்பெயர்ந்த ஓர் இளைஞன், தனது 24ஆவது வயதில் ஒரு மாத காலத்தில் எழுதி முடித்த நாவல் ‘சாயாவனம்’. அந்த இளைஞன் ஆண்டுக்கு ஒருமுறை தனது நாவலுக்கு மெருகூட்டி மூன்று ஆண்டுகளை செலவிட்டான். அந்த நாவல் 1969ஆம் ஆண்டு சென்னையில் சிறந்த வெளியீட்டு நிறுவனமாக இயங்கி வந்த லட்சுமி கிருஷ்ணமூர்த்தியின் வாசகர் வட்டம் மூலம் வெளியிடப்பட்டது. 1996இல் சாகித்திய அகாதெமி விருது பெற்ற எழுத்தாளர் சா.கந்தசாமியின் முதல் நாவல் ‘சாயாவனம்’.

கால் நூற்றாண்டு வாழ்வனுபவம் கூட காணாத சா.கந்தசாமி, தான் பிறந்து வளர்ந்த மயிலாடுதுறையையோ தான் குடிபெயர்ந்த சென்னையையோ தனது நாவலின் கதைக்களனாகக் கொள்ளவில்லை. மாறாக தனது தாயின் ஊராகிய காவிரிப்பூம்பட்டினத்து சமூக வாழ்வை தனது படைப்பாக்கியிருக்கிறார். இதில் கால மாற்றத்தின் விளைவுகள் உணர்த்தப்பட்டுள்ளன; எதிர்காலம் தரப்போகிற அதிர்வுகளும் அதிர்ச்சிகளும் இந்நாவலில் கணிக்கப்பட்டுள்ளன. 1980களில் அல்வின் டாப்ளர் எழுதிய Future Shock என்ற நூலின் ஒரு சிறு கூறாக சாயாவனத்தைக் கருத இடமிருக்கிறது.

சாயாவனம் என்பது பூம்புகார் கடற்கரையிலிருந்து மேற்கில் 5 கி.மி. தொலைவில் உள்ள ஒரு கிராமம். சாயாவனமும் பல்லவனமும் ஒரு கிலோமீட்டர் இடைவெளியில் உள்ள இரு கிராமங்கள்; சிவத்தலங்கள். பல்லவனீசுவரம் திருக்கோயிலில் ஆடி மாதம் பத்து நாட்களுக்கு பட்டினத்தார் திருவிழா நடைபெறும். வெளிநாட்டு



வாணிகத்தில் பெரும்பொருள் ஈட்ட கடற்பயணம் மேற்கொண்ட மகன், கொண்டு வந்த 'காதற்ற ஊசியும் வாராது காண் கடைவழிக்கே' என்று தொடங்கும் நறுக்கு ஓலையை கண்ட வணிகன் துறவியான கதை பிறந்த இடம் இந்த ஊர். பூம்புகாரை ஒட்டி ஏழு வனங்கள் இருந்ததாகவும் ஆழிப்பேரலை எழுந்தபோது ஐந்து வனங்களை கடல்கொண்டதாகவும் செவிவழிச் செய்திகள் உலவும் ஊர் இது.

ஏறக்குறைய 1800 ஆண்டுகளுக்கு முன்பே வணிகத்திற்காக இடம்பெயர்ந்து வந்திருந்த யவனர்கள் உலவிய பூமி இது. பல்வேறு நாட்டினர், பல்வேறு மொழியினர் பூம்புகார் கடற்கரையில் வந்திறங்கி உள்ளூர் மக்களுடன் கலந்து உறவாடி அகமகிழ்ந்து வாழ்ந்தனர் என்று பதிவு செய்கிறது 'பட்டினப்பாலை'. 'புலம் பெயர் மாக்கள் கலந்தினிதுறையும் முட்டாச் சிறப்பின் பட்டினம்' என்று புகார் நகரம் சிறப்பிக்கப்படுகிறது. புலம் பெயர்வு வாழ்க்கை குறித்துப் பேசிய பழந்தமிழ் படைப்புகளில் சிலப்பதிகாரமும் பட்டினப்பாலையும் குறிப்பிடத்தக்கவை.

பூம்புகார் நகரத்து மக்கள் அந்த நகரத்தை விட்டு வேற்றிடங்களுக்குச் செல்வதில்லை என்று சொல்கிறது சிலப்பதிகாரம்.

> பதியெழு யறியாப் பழங்குடி தழீஇய
> பொதுவறு சிறப்பிற் புகார்
>
> - (சிலப்பதிகாரம்: 1:15&16)

என்பது கடவுள் வாழ்த்துக்குப் பிறகு வரும் புகார்க் காண்டத்தின் தொடக்க வரிகள்; எல்லா வசதிகளும் பெற்ற பிரஜைகளாக அவர்கள் வாழ்ந்திருக்கலாம். இல்லையென்றால் பௌத்தமும் சமணமும் குடிகொண்டிருந்த அவ்வூரில் மக்கள் எளிமையான மனநிறைவு கொண்ட வாழ்வியலை ஏற்று நடந்திருக்கலாம். ஆனால், சிலம்பின் நாயகன் பெரும் வணிகக் குடும்பத்தைச் சார்ந்தவனாக இருப்பினும் அவனது சமூக நிலை கேள்விக்குள்ளான போது புகாரை விட்டு மதுரைக்குப் புலம்பெயர்கிறான் என்கிற உண்மை சிலம்பில் ஒரு நகைமுரண். பதி எழு அறியா நகரில் கோவலன் எல்லை தாண்டியது ஏன் என்ற வினாவுக்கு சா.கந்தசாமியின் 'சாயாவனம்' விடையளிக்கிறது.

பூம்புகார் என்றாலும் சாயாவனம் என்றாலும் வேறு வேறல்ல; பூம்புகார் கடற்கரை நகரம். சாயாவனம் பக்கத்து கிராமம்.

கோவலனின் இடப்பெயர்வும் சாயாவனம் நாவலின் பிரதம நாயகன் சிதம்பரத்தின் புலப்பெயர்வும் அடிப்படையில் ஒன்றேயன்றி வேறல்ல.

சோழ நாட்டில் காவிரிக்கரை மக்களின் வாழ்வியலும் பண்பாடும் சமூக அமைப்பும் கடந்த ஐம்பது ஆண்டுகளுக்கு முன் வரை ஒரே சீராக பெரிய மாற்றங்கள் இன்றி அமைந்திருந்தன.

புகார் நகரத்து மக்கள் ஊர் எல்லையைத் தாண்டாதவர்கள் என்று எப்படி சிலம்பு பெருமை பேசியதோ ஏறக்குறைய அதே நிலைதான் 'சாயாவனம்' நாவலின் கதைமாந்தர்களுக்கும் இருந்திருக்கும். 1940இல் பிறந்த சா.க. கனடா வரையில் சென்று வந்துள்ளார். உலகத்தின் அட்சரேகைகள் அவருக்கு அத்துப்படி. ஆனால், அவரது முன்னோர்கள் அதிகபட்சமாக ஆருத்ரா தரிசனத்திற்கு 40 கி.மீ. தொலைவில் இருக்கும் சிதம்பரத்துக்கு சென்றிருந்தால் அது பெரிய விஷயம். அவர்கள் சென்னைக்குச் சென்றிருந்தால் அது ஏதோ சிகாகோவுக்குச் சென்று வந்ததுபோல் வீட்டுத் திண்ணையில் சகாக்களுடன் கதை திரித்துப் பேசிக் கொண்டிருந்திருப்பார்கள்.

சாயாவனத்து பூமி விவசாய பூமி. இங்கு பிள்ளைமார், முதலியார், செட்டியார் பிரதானமாக நிலவுடைமை சமூகத்தினராக இருந்தனர். வன்னியர்களும் தேவர்களும் விவசாயம் மற்றும் பிறதொழில் சார்ந்தவர்களாகவும் இருந்தனர். பண்ணை முறை அந்தக் காலக்கட்டத்தில் கிராமத்தின் நிர்வாக முறையாக இருந்தது. பண்ணை ஆட்கள் ஒடுக்கப்பட்ட சமூகத்தினராக இருந்தனர். எல்லா கிராமங்களிலும் பள்ளிக் கூடங்கள் இருந்ததில்லை. விளிம்புநிலை மக்களிடம் அரசியல் அறிவும் அரசியல் ஈடுபாடும் மிகக் குறைவாகவே காணப்பட்டன. கர்ணமும் பட்டாமணியர் என்ற கிராம அதிகாரியும் அரசின் செயல் அதிகாரிகளாக இருந்தனர். தற்கொலை மரணங்களுக்கு மட்டுமே போலீஸ் தலைகாட்டும். கிராமத்தின் பெரிய மனிதர்களே இந்த பூமியின் இயங்கு விசையாக செயல்பட்டு வந்த காலம் அது.

'சாயாவனம்' இந்த வரலாற்றுப் பின்புலத்தில் உருவாக்கப்பட்ட நாவல்.

இதை நிறுவ நீ ஏதாவது களஆய்வு செய்திருக்கிறாயா என்ற கேள்வி எழலாம். அதற்குப் பதில் சொல்ல இந்தக் கட்டுரையாளருக்கு அவசியம் எதுவுமில்லை. ஏனெனில், இவன் சா.க.வின் சாயாவனத்தில் தனது பிள்ளைப் பிராயத்தில் சுற்றித் திரிந்தவன். 'சாயாவனம்' நாவலில் காட்டின் இடையே செல்லும் ஆற்றின் மறுகரையில் உள்ள கிராமத்தில் வளர்ந்தவன். சாயாவனம் சிவன் கோயிலின் அறங்காவலர் இக்கட்டுரையாளரின் தாயின் தந்தை. எனவே, இக்கட்டுரையாளரே சாயாவன நாவலின் சமூக குறுக்கு வெட்டுத் தோற்றத்தை சரி என்று சொல்லக்கூடிய ரத்தமும் சதையுமான சாட்சி. இக்கட்டுரையாளரின் அறுபதாண்டு அனுபவத்தை கணக்கில் கொண்டால் 'சாயாவனம்' நாவல், சாயாவனத்து மக்களையும் சூழ்நிலையையும் துல்லியமாகச் சொன்ன நாவல் என்று தீர்ப்பு எழுத தகுதி வாய்ந்த நீதிபதியும் இவரே.

இதுகாறும் 'சாயாவனம்' நாவலை தமிழில் சூழலியல் பற்றி எழுதப்பட்ட முதல் நாவல் என்று நவீன தமிழ் இலக்கிய வாசகர்கள் கொண்டாடி வருகிறார்கள். தப்பேதும் இல்லை. நாமும் சரவெடி வெடிப்போம்.

ஆனால், சாயாவனத்தின் ஆன்மாவில் புலம்பெயர்வு இலக்கியத்தின் சில கூறுகள் தென்படுவதை இதுவரை யாரும் பேசியதாகத் தெரியவில்லை. இந்த நாவலில் புலம்பெயர்வு என்கிற கருத்தாக்கம் ஒரு மருத்துவரின் ரணசிகிச்சை கத்தி நோயாளியின் உடலில் இட்டுச் செல்லும் வடுவைப் போல நுண்மையானதாகத் தென்படுகிறது.

சென்ற நூற்றாண்டின் தொடக்கத்தில் நிகழும் இக்கதை, அந்தக் காலக்கட்டத்தின் சமூக அமைப்பையும் சமூக உறவுகளையும் துல்லியமாகப் பேசுகிறது. இந்த நாவலில் புலப்பெயர்வு பற்றி யோசித்திருப்பதும் பதிவு செய்திருப்பதும் படைப்பாளியின் தொலைநோக்குப் பார்வையாகச் சொல்லத் தோன்றுகிறது.

இலங்கையில் பிறந்து வளர்ந்து, சிங்கப்பூர் சென்று, தனது மாமன் ஊரான சாயாவனத்துக்குத் திரும்பும் சிதம்பரம் என்ற இளைஞனின் வருகையிலிருந்து ஆரம்பிக்கிறது நாவல்.

சிதம்பரத்தின் அம்மா காவேரி வாழ்ந்த ஊர் திட்டக்குடி. சாயாவனம் சிவனாண்டித் தேவர் அவளுக்கு அண்ணன் முறை உறவு. காவேரியின் கணவன் திடீரென்று ஒருநாள் வீட்டை விட்டு ஓடிவிட்டான். சாமியாராகிப் போய்விட்டான். நிலைகுலைந்தாள் காவேரி. சிவனாண்டி தன் வீட்டுக்கு வந்து தங்கியிருக்க அழைப்பு விடுத்தார். அவரது அழைப்பையும் நிராகரித்தாள் காவேரி.

ஓடிப்போனவனைப் பற்றி ஊரின் ஏச்சும் பேச்சும் அவள் காதில் விழாமல் போகுமா? சின்ன கிராமத்தில் கிளம்பும் அவதூறுகளுக்கு அளவே கிடையாது. ஆளாளுக்கு அளந்துவிடும் கற்பனைக் கதைகளில் காவேரி நீந்திக் கரையேற முடியுமா? நெஞ்சுரம் மிக்கவள் அவள். இத்தகைய சூழ்நிலையில் அரளி விதைகளை அரைத்துக் குடித்து ஆயுளை முடித்துக் கொள்வார்கள் அந்தக் காலத்து அப்பாவிப் பெண்கள். அவள் புலம்பவில்லை. புலம் பெயர்ந்தாள். போரும் கலகமும் போராட்டமும் மதவாதமும் மனிதர்களை எப்படிப் புலம்பெயரச் செய்கின்றனவோ அப்படித்தான் அவலமும் அவதூறும் மனிதர்களை அவர்கள் நிலைபெற்ற இடத்திலிருந்து விரட்டியடிக்கிறது வேறிடங்களுக்கு.

இதுபோலத்தான் சென்ற நூற்றாண்டின் முதல் பத்தாண்டுகளில் கேரளாவில் நடைபெற்ற தாத்திரிக்குட்டியின் ஸ்மார்த்த விசாரத்தில் தண்டிக்கப்பட்ட ஆண்களும் கேரளாவை விட்டுப் புலம்பெயர்ந்தார்கள். தாத்ரிக்குட்டியுடன் 64 ஆண்கள்

தொடர்பு கொண்டிருந்தார்கள். அவர்களில் சாதி நீக்கம் செய்யப்பட்ட மேனன் ஒருவர், ஊரின் பேச்சுக்கும் பழிக்கும் அஞ்சி இலங்கைக்குப் பயணமாகி அங்கேயே இறந்துபோனார். அவரது மகன்கள் பிற்காலத்தில் தமிழகத்தின் பெருமைக்குரிய பிரபலங்கள் ஆனார்கள். ஊர்ப்பழி என்பது ஒருவரைப் பெயர்த்தெடுத்து அந்நிய மண்ணில் ஊன்றி விடும்.




சாயாவனத்து மக்கள் பழிக்கு அஞ்சியவர்கள். ஊர் சொல்லுக்கு கட்டுப்பட்டவர்கள். சென்ற நூற்றாண்டில் வெளிநாடுகளில் பொருளீட்டக் கடல் கடந்தார்கள். சாதியப் பண்ணை முறை தளைகளிலிருந்து தப்பவும் தலை நிமிர்ந்து நடக்கவும் தயாரானது அடித்தள குலமும் இடைநிலைக் குலமும். இந்தச் சமூக அதிர்வுதான் அல்லது அதிர்வின் ஆரம்பம் தான் காவேரி என்கிற பாத்திரத்தின் புலப்பெயர்வு.

காவேரி கைக்குழந்தையுடன் தனித்து விடப்பட்டவள். அவள் இலங்கைக்குக் கப்பலேறியபோது சிதம்பரம் இரண்டரை வயது கைக்குழந்தை. யாரையும் அண்டி வாழ விரும்பாத கௌரவமிக்க மொட்டாணி வம்சத்தைச் சேர்ந்த காவேரி ஓடிப்போனவனின் மனைவி என்ற அவமானத்துடன் வாழ விரும்பவில்லை.

அவளின் புலம்பெயர்வுக்கு அவதூறும் அவமானமும் காரணங்களாகின்றன. இந்தக் காரணிகள் புலம்பெயர்வு இலக்கியத்தில் அதிகம் பேசப்படாதவை; நுட்பமானவை; சென்ற நூற்றாண்டின் ஆரம்ப காலத்தில் பண்ணை முறை கிராம பரிபாலனங்களில் சிக்கிக் கிடந்த மக்களின் எழுச்சியையும் அவர்தம் அயல்நாடுகளை நோக்கிய நகர்வையும் ஒரு சிறு பாத்திரம் மூலம் சா.க.வின் ‘சாயாவனம்’ முன் வைக்கிறது. புலம்பெயர்வின் பண்பாட்டு அதிர்ச்சிகளையும் ஓரிரு வரிகளில் உணர வைக்கிறார் சா.க.

காவேரி, இலங்கையில் தேயிலைத்தோட்டங்களில் பாடுபடுகிறாள். சின்னப் பையனாக சிதம்பரம் அன்னையின் துயரை பங்குபோட்டுக் கொள்கிறான். அம்மை நோய் கண்டு காவேரி இறந்து போகிறாள். காவேரிக்கரை உறவுகள் யாரும் கதறி அழுவதற்கான சூழ்நிலையின்றி அந்நியமண்ணில் சாம்பலானாள். சின்னப் பையன் சிதம்பரத்தை கறுப்பு கிறித்துவப் பாதிரியார் மதம் மாற்றி ஞானஸ்நானம் செய்வித்து டேவிட் சிதம்பரமாக மாற்றிவிடுகிறார். தேவாலயப் பள்ளிக்கூடத்தில் படித்து வருகிறான்.

பாதிரியாரால் ஒரு வீட்டில் சிதம்பரம் வேலைக்கு அமர்த்தப்படுகிறான். அந்த வீட்டிலிருந்து பத்து ரூபாய் பணம் திருடிக் கொண்டு மலையகத்திலிருந்து கொழும்பு செல்கிறான். அங்கே தேவாலயத்தில் ஒரு காதல் மலர்கிறது. இவனுடைய காதலி கல்யாணமானவர். அவளுக்கு ஒரு கைக்குழந்தையும் இருந்தது. அவளுடன் பழக ஆரம்பித்து ஒன்பது மாதங்கள் கடந்த நிலையில் சிதம்பரத்தை நிராகரிக்கிறாள் அவனது காதலி. சிவசண்முகம் என்கிற இந்துவின் பாத்திரக் கடையில் வேலைக்குச் சேர்கிறான். சிவசண்முகம் டேவிட் சிதம்பரத்தை வெறும் சிதம்பரமாக மாற்றுகிறார். அவன் நெற்றியில் திருநீறு ஏறுகிறது. முதலாளியுடன் கதிர்காமம் சென்று வருகிறான்.

கடவுள் பக்தி என்பது சிதம்பரத்திற்கு கேள்விக்குள்ளாகி விடுகிறது. கோயில்கள் அவனை பொறுத்தவரையில் தன் மீது மாறுபட்ட அலங்காரங்களைச் செய்து பார்த்த அழகு நிலையங்கள். அவன் கடவுள் என்கிற கருத்தாக்கத்தின் மீது கரிசனமற்றவனாக கவலையற்றவனாக மாறி விடுகிறான். கடைசியாக கிராப் வைத்துக்கொண்ட சிதம்பரமாக சாயாவனம் சிவனாண்டித் தேவர் வீட்டுக்கு வந்தடைகிறான்.

நவீன யுகத்தில் அயலகத்தில் சிதம்பரம் பெற்ற அறிவைக் கொண்டு பூர்விக மண்ணில் வனத்தை அழித்து ஆலை அமைக்கிறான். 256 பக்கங்கள் கொண்ட இந்த நாவலில் காவிரியின் புலம்பெயர்வும் அந்நிய மண்ணில் ஆளான சிதம்பரத்தின் வருகையும் ஓரிரு பக்கங்களில் முடிந்து விடுகின்றன. இவ்விரு பக்கங்கள் சொல்லாமல் சொல்பவை தான் ‘சாயாவனம்’ என்ற நாவலின் புலம்பெயர்வு பற்றிய அதிர்வுகள். சிதம்பரத்திற்கு நிகழ்ந்த மதமாற்றங்களும் கலாச்சார மாற்றங்களும் மனமாற்றங்களும்தான் உலகம் முழுதும் நிகழ்ந்து கொண்டிருக்கின்ற புலம்பெயர்வின் விளைவுகள். அந்த விதத்தில் நிகழப் போகிற சமூக மாற்றத்தையும் அதன் உடன்நிகழ்வான புலப்பெயர்வையும் சாயாவனத்தில் பதிவு செய்துள்ள இளவயது சா.கவை பாராட்டலாம்.

‘சாயாவனம்’, சரிந்த குடும்பத்தின் புலப்பெயர்வில் எரிந்த வனம்.

(தொடரும்)


**சந்தியா நடராஜன்**
<sandhyapathippagam@gmail.com>

# விற்பனைக்கு

## கி.தெ. மாப்பசான்

## தமிழில்: நாகரத்தினம் கிருஷ்ணா

சூரியன் உதிக்கும் போது, பனி பெய்த பூமியில், ஒருபக்கம் வயல்கள், மறுபக்கம் கடலென்றிருக்க, இரண்டிற்கும் நடுவே நெடுக காலாற நடப்பதில்தான் எவ்வளவு சுகம்!

எவ்வளவு சுகம், கண்கள் ஊடாக ஒளியாகவும் மூக்குத் துவாரங்கள் வழியாக சுவாசக் காற்றாகவும் உடலூடாக வீசும் காற்றாகவும் நம்முள் அது பிரவேசிக்கிற போது!

பூமி என்றதும் மிகவும் தெளிவான, அசாதரண, துல்லியமான, நினைவுகள் நம்மிடம். அந்நினைவு இனிமையான, கணநேர மனக் கிளர்ச்சிக்குரியது. ஒரு சாலையின் வளைவில், பள்ளத்தாக்கொன்றின் நுழைவாயிலில், ஆற்றங்கரையோரம், கண்ட காட்சிகளால் உணரப்படுபவை. மனதிற்கிசைந்த அழகான ஒருத்தியை சந்தித்ததுபோல, பூமி விஷயத்தில் மட்டும் இத்தனை பிரியமிக்க தருணங்களை நாம் நினைவில் வைத்திருப்பது ஏன்?

நான் திக்கு திசையின்றி நடந்த நாட்கள் எத்தனையோ. அதில் ஒருநாள் எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. அன்றைய தினம் ஃபினிஸ்த்தேர் முனையைக் குறிவைத்து, பிரெத்தாஜ்ன் பிரதேச கடற்கரையையொட்டி, எவ்விதச் சிந்தனைகளுமின்றி வேகமாக நடந்து கொண்டிருந்தேன். பிரெத்தாஞ்ன் பிராந்தியத்தின் கண்ணுக்கினிய அழகான பகுதி, காம்ப்பெர்லே. அதிக தூரத்தில் இல்லை, பக்கம்.





இளவேனிற் காலத்தின் காலைநேரம். நம்முடைய இருபது வயது இளமையை மீட்டெடுக்கக்கூடிய, நம்பிக்கைகளை மறுகட்டமைப்புச் செய்து பதின்வயது கனவுகளைத்திருப்பித்தரவல்லகாலைகளில் ஒன்று.

திசைகள் பிடிபடாத நிலையில், கோதுமை வயல்களுக்கும் அலை கடலுக்குமிடையில் நடக்க வேண்டியிருந்தது. அலைகளாவது அவ்வப்போது அசைந்தன, கோதுமைக் கதிர்களில் அசைவென்பதே இல்லை. முற்றிய கோதுமைக் கதிர்களின் மணத்தையும் கடற்பாசியின் மணத்தையும் நுகர்ந்த வண்ணம், எவ்வித சிந்தனையுமின்றி, முன்னோக்கி, பதினைந்து வருடங்களுக்கு முன்பு ஆரம்பித்த பயணத்தின் தொடர்ச்சியாக அன்று பிரெத்தாஞ் கடற்கரைப் பகுதிகளில் திரிந்து கொண்டிருந்தேன். சோர்வென்று எதுவுமில்லை. மாறாக சுறுசுறுப்பும் மகிழ்ச்சியும் உற்சாகமும் என்னிடமிருக்க நடந்து கொண்டிருந்தேன்.

எதைக் குறித்தும் யோசனைகளில்லை. தன்னை மறந்து, ஆழமாக, சரீரத்திற்கு சுகமளிக்கும் இயற்கை இன்பத்தில் திளைக்கிறபோதும், சந்தோஷ மிருகம் புற்களிடையே ஓடும் போதும் அல்லது அதுவே ஒரு இராட்சஸ பறவைபோல நீல ஆகாயத்தில் பகலவன் முன்பாக பறக்கிறபோதும், வாய்ப்பதெல்லாம் மகிழ்ச்சிக் கணங்கள். இந்நிலையில் எதைப் பற்றிச் சிந்திக்க போகிறேன்? தூரத்தில் பக்திப் பாடல்களின் ஓசை. அன்று ஞாயிற்றுக்கிழமை. எனவே, கிறித்துவ சமய ஊர்வலமாக இருக்கலாம். இரண்டொரு அடியெடுத்து வைத்து திருப்பமொன்றில் அசையாமல் நின்றேன். மனதில் ஒருவித சிலிர்ப்பு. ஐந்து பெரிய மீன்பிடி பாய்மரப் படகுகள்; அவற்றில் ஆண்கள், பெண்கள், குழந்தைகளென்று மனிதர் கூட்டம். அவர்கள் ப்லூனெவென் புனித யாத்திரை மேற்கொண்டுள்ள பக்தர்களென விளங்கிக்கொண்டேன்.

சொற்பநேரமே நீடித்த மென்காற்று, பழுப்பு நிற பாய்மரக் கித்தான்களை ஊதித் தள்ள சிரமப்பட, படகுகளும் மெதுவாகச் சென்றன; வீசிய மறுகணமே காற்று களைத்துப்போனதும், கித்தான்கள் பாய்மரங்களைத் தழுவிக்கொண்டு விழுந்திருந்ததும் காரணம்.

மனிதச் சுமை காரணமாக படகுகள் தள்ளாடி நகர்ந்தன. படகிலிருந்த அனைவரும் பாடிக்கொண்டிருந்தனர். பெரிய தொப்பியை அணிந்திருந்த ஆடவர்



கூட்டம் படகின் விளிம்பை ஒட்டி நின்றவண்ணம் சத்தமிட்டுப் பாட, பெண்கள் கீச்சொலியில் கத்துகிறார்கள். இந்நிலையில் கரகரகரப்புடன் பாடும் பிள்ளைகளின் கம்மியக் குரல்,பொதுவாகத் தோத்திரப் பாடல்களின் பெருங்கூச்சலில் அடங்கிப்போகும் போலி குழலோசைகள் கதிக்கு ஆளாயின.

ஐந்து படகுகளின் பயணிகளும் பாடியது ஒரே தோத்திரப் பாடலை. அதைச் சத்தமாகவும் பாடினார்கள். அப்பாடலின் சலிப்பூட்டுகிற ஒலி வானத்தை முட்டியது. ஐந்து படகுகளும் ஒன்றன் பின் ஒன்றாக உரசிக்கொண்டு சென்றன.

அவர்கள் என்னை முந்திக்கொண்டதோடு என்னைக் கடந்தும் சென்றார்கள். அவர்களுக்கும் எனக்குமான இடைவெளி தூரம் மெள்ளமெள்ள அதிகரிக்க பாடல் ஒசை பலவீனமடைந்து, இறுதியில் அடங்கியும் போனது.

இனிமையான விஷயங்களைக் கனவு கான ஆரம்பித்தேன். அதாவது இளம் வயது பையன்களைப் போலச் சிறுபிள்ளைத்தனமான, சொகுசான கனவுகளை.

கனவுக்குறிய வயதை எத்தனைச் சீக்கிரம் நாம் தொலைத்துவிடுகிறோம். உயிர் வாழ்க்கையில், மகிழ்ச்சியான கணங்களே கனவுகாணும் வயதொன்றுதான்! தனித்திருக்கிற கணத்திலெல்லாம், நம்பிக்கைகளில் கவனத்தைச் செலுத்தவல்ல தெய்வீகமான மனோசக்தியை நெஞ்சில் சுமக்கிறொம், எனவே, ஒருபோதும் நாம் துணையின்றியோ, சோகத்துடனோ, முகவாட்டத்துடனோ இருப்பதில்லை. அது எத்தனை விசித்திரமான பூமி! அங்கு காடு மேடென்று அலைந்து திரியும் சிந்தனையின் அமானுஷ்ய கற்பனையில் எதுவும் நடக்கலாம். கனவுகளின் பொன்னுலகில், வாழ்க்கை எவ்வளவு ரம்மியமானது!

ம்! என் துரதிர்ஷ்டம், எல்லாம் முடிந்தது!

திரும்பவும் கனவு காணத் ஆரம்பித்தேன். இளம்வயது கனவுகள் அல்ல, பின் எதைக் குறித்து? எவற்றையெல்லாம் தொடர்ந்து எதிர்பார்ப்போமோ, எவற்றுக்கெல்லாம் ஆசைப்படுவோமோ அவற்றுக்காக; செல்வம், புகழ் பெண்கள் என்று அனைத்திற்கும் கனவு கண்டேன்.

நடந்து கொண்டிருந்தேன். முற்றிய கோதுமைக் கதிர்கள், என் விரல்களுக்கு வளைந்துகொடுத்து

எனக்குக் கிளுகிளுப்பூட்ட தலைமுடியைக் கோதுவதுபோல,கோதுமையின் பொன்னிறதலையை வருடியபடி, வேகமாக நடந்து கொண்டிருந்தேன்.

சிறிய மேடுபாங்கான நிலப்பகுதியை சுற்றிக்கொண்டு நடக்க, ஒரு குறுகிய, வட்டமான கடற்கரையின் முடிவில், அதைத் தொட்டதுபோல அமைந்திருந்த மூன்றடுக்கான நிலப்பாங்கில், வெள்ளை வெளேரென்று ஒரு வீடு.

இவ்வீட்டின் தோற்றம், எதற்காக என்னிடம் சந்தோஷசிலிர்ப்பை ஏற்படுத்த வேண்டும். இதற்கான காரணம் என்ன? எனது மனம் அறிந்திருக்குமா? சிற்சில சந்தர்ப்பங்களில் இதுபோன்று சுற்றித் திரிகிறபோது, அப்பகுதிகளில் சிலவற்றை வெகுகாலமாக அறிந்திருப்பதுபோலவும், மிகவும் பரிச்சயமானவை போலவும், மனதிற்குப் பரவசமூட்டுவது போலவும் உணர்கிறோம். இவற்றை நாம் அதற்கு முன்பாக கண்டிருக்க சாத்தியமில்லையா? இதற்கு முன்பு அப்பகுதியில் ஒருவேளை வாழ்ந்திருக்க முடியாதா? நம்மை அனைத்தும் ஈர்க்கின்றன, இன்பத்தில் மூழ்கடிக்கின்றன. அடிவானத்தின் மென்மையான கோடு, மரங்களின் அமைப்பு, மணலின் நிறம்!

ஓ! உயரமான படிகள் போலமைந்த நில அடுக்குகளில் நிற்கும் அந்த வீடுதான் எவ்வளவு அழகு! பிரம்மாண்டமான படிகளாக நீருள்ள திசைநோக்கி இறங்கியுள்ள அடுக்குகளின் நிலப்பரப்பில் உயரமான பழ மரங்கள். அவ்வடுக்குகளின் விளிம்புகளில், நெடுக மஞ்சள் வண்ண பூக்களுடன் ஸ்பெயின் தேச ழெனெ வகைப் பூச்செடிகள் புதர்போல மண்டிக்கிடக்க, ஒவ்வொரு அடுக்கும் தலையில் தங்கக் கிரீடத்தை அணிந்திருக்கும் தோற்றத்தை அளித்தது.

குடியிருப்பினால் காதல் வயப்பட்டிருக்க, நடப்பதை நிறுத்திக்கொண்டேன். அவ்வீட்டை எனக்குச் சொந்தமாக்கிக் கொள்ளவேண்டும், அங்கே வாழவேண்டும். அதுவும் கொஞ்ச காலத்திற்கல்ல நிரந்தரமாக என்பதுபோல, அதன் மீது காதலாகியிருந்தேன்.

வாயிலை நெருங்கினேன். இதயம் மட்டுமீறிய உந்துதலில் படபடவென அடித்துக்கொண்டது. தடுப்புச் சுவரின் சிறுதூண்களில் ஒன்றில், ஒரு பெரிய விளம்பர அட்டை. அதில் 'விற்பனைக்கு' என்றொரு வாசகம். மறுகணம் யாரோ அவ்வீட்டை எனக்குத் தானமாக கொடுத்ததுபோல ஒரு இன்ப அதிர்ச்சி! ஏன்? எதற்காக? எனக்குத் தெரியாது!

அவ்வீடு 'விற்பனைக்கு'. எனவே, தற்போதைய நிலையில் கிட்டத்தட்ட ஒருவருக்கும் சொந்தமானதல்ல. நாளை யாருக்கு வேண்டுமானாலும் சொந்தமாகலாம், நான் உட்பட. ஆம், எனக்கேகூட சொந்தமாகலாம்! எனக்கு! ஏன் இந்த விஷயத்தில் இப்படியொரு ஆழமான, விவரிக்கப் போதாத உணர்வு?

இந்த வீட்டை வாங்க என்னால் ஆகாதென்பது நன்றாகத் தெரியும்! வாங்குவதற்கு என்னிடம் ஏது பணம்? அதனாலென்ன, அவ்வீடு விற்பனைக்குரியது என்ற சொல் முக்கியம். கூண்டில் அடைபட்டிருக்கும் ஒரு பறவை அதன் எஜமானருக்கு மட்டுமே சொந்தம். மாறாக வானில் பறக்கும் பறவை பொதுவானது என்கிறபோது, நான் சொந்தமாக்கிக்கொள்ள முடியும்.

வளமான நிலப்பரப்பிற்குள் சென்றேன். ஒன்றின்மேல் ஒன்றாக அடுக்கிய அரங்குகளைப் போல நில அமைப்பு, சிலுவையில் அறையப்பட்டத் தோற்றத்துடன் எஸ்ப்பலியெக்கள் (espaliers1). கொத்து கொத்தாக பூத்திருந்த மஞ்சள் வண்ண ழெனெ பூக்கள். ஒவ்வொரு அடுக்கின் முடிவிலும் வயதான இரண்டு அத்தி மரங்கள். மொத்தத்தில் அத்தோட்டம்தான் எவ்வளவு அழகு!

ஒவ்வொரு அடுக்காக கடந்து நில அமைப்பின் கடைசி அடுக்கான மூன்றாவது அடுக்கில் நின்று, அடிவானத்தைப் பார்த்தேன். கீழே வளைந்தும் எங்கும் மணலாகவும் பரந்து கிடந்த சின்னஞ்சிறு கடற்கரையை நிலப்பகுதியிலிருந்து கனத்த மூன்று பழுப்பு நிற பாறைகள் பிரித்திருந்தன. இங்கிருந்து காண, கடல்வாயிலை அடைத்த பெருங்கதவுகள் போலவும் இருந்தன. தவிர கடற் கொந்தளிப்பு நாட்களில், அப்பாறைகளில் அலைகள் மோதிச் சிதறுமென்பது நிச்சயம்.

எதிர்முனையில் இரண்டு பாறைகள். அவற்றில் ஒன்று நிற்பது போலவும் மற்றது புற்களின் மீது படுத்திருப்பதுபோலவும் இருந்தன. நிற்பது மெனிர் மற்றது தொல்மென் (Dolmen2) என்றும் புரிந்தது. இரண்டும் பார்ப்பதற்கு கணவன் மனைவி போலவும், ஏதோ ஒரு சாபத்தால் கற்களாக மாறியவை போலவும், முன்பொரு காலத்தில் தனித்திருந்த கடலை பல நூற்றாண்டு காலமாக தெரிந்துவைத்திருப்பவை போலவும், சிறிய வீடு முழுமையாக கட்டிமுடிக்கபடும் வரை தொடர்ந்து அவதானித்து வந்ததுபோலவும் எனக்குப் பட்டது. விற்பனைக்கென்று உள்ள அச்சிறிய வீடு ஒருநாள் இடிந்து நொறுங்க, காற்றில் கலக்க, பின்னர் அவ்விடத்தில் புல்பூண்டு முளைக்க அவற்றையுங்கூட இந்த ஜோடி காண நேரலாமென எனக்குத் தோன்றியது.

'பல நூற்றாண்டுகளைக் கண்ட 'மெனிர் தொல்மென்' தம்பதிகளே, நீங்கள் இருவரும் என் அன்புக்குரியவர்கள்' என அக்கற்களிடம் தெரிவித்தேன்.

வீட்டின் வாயிற்கதவில் நின்று, சொந்தவீட்டின் அழைப்பு மணியை உபயோகிப்பதுபோல அடித்துவிட்டுக் காத்திருந்தேன். ஒரு பெண் கதவைத் திறந்தாள், பணிப்பெண் தோற்றம், சற்று வயதானவள், கருப்பு உடை, தலையில் மடத்துப் பெண்களின் வெண்ணிற தொப்பி. இப் பெண்மணியைக்கூட

இதற்குமுன் பார்த்திருக்க வேண்டும் என்பதுபோல எனக்குப் பட்டது.

"நீங்கள் பிரெத்தோன் பெண்மணியாக இருக்கவேண்டும், சரிதானே?" என அவளிடம் கேட்டேன்.

"இல்லை ஐயா, நான் லொர்ரேன் பிராந்தியத்தைச் சேர்ந்தவள்" என பதிலிறுத்தவள் தொடர்ந்து, "நீங்கள் வீட்டைப் பார்க்க வந்தவரா?" எனக்கேட்க, அவளிடம், "நீங்கள் நினைத்தது சரி!" எனக் கூறிவிட்டு, அப்பெண்மணியைத் தொடர்ந்தேன்.

அங்கிருந்த சுவர்கள், தளவாடங்களென ஒவ்வொன்றையும் என்னால் நினைவு கூர முடிந்தது. முன்கூடத்தில் என் வீட்டில் வழக்கமாக எனது கைத்தடியை சாத்தி வைப்பது வழக்கம். அன்று அதைக்கூட அங்கு தேடினேன். வீட்டின் வரவேற்புக் கூடத்திற்குள் சென்றேன். சுவர்கள் கோரையில் முடைந்த விரிப்புகொண்டு அலங்கரிக்கப்பட்டிருக்க, கடல் நீரைப் பார்க்கும் வகையில் மூன்று மிகப்பெரிய சன்னல்கள். தீக்காயும் அடுப்பின் மீது அலங்காரமாக சீனத்துப் பீங்கானில் பொருட்கள். அவற்றோடு ஒரு பெண்ணின் பெரிய அளவு புகைப்படம். தாமதிக்காது, அதை நோக்கிச் சென்றேன். நிச்சயம் என்னால் அவளை அடையாளம் காணமுடியும் என்ற நம்பிக்கை காரணமாக.

நினைத்ததுபோலவே, அவள் யாரென்று விளங்கியது. அதேவேளை அவளை ஒருபோதும் இதற்கு முன்பு சந்தித்ததில்லை என்பதும் நிச்சயம். அவளா அது? எனக்கு வியப்பு. எவளுக்காக காத்திருந்தேனோ எவளை அடைய வேண்டுமென விரும்பினேனோ அதே பெண்! என்னுடைய கனவுகளில் ஓயாமல் துரத்தும் அம்முகத்தை நினைவு கூர்ந்தேன். இரவு பகலாக செல்லும் இடமெல்லாம் என்னால் தேடப்படும் பெண். இன்னும் சற்று நேரத்தில் வீதியில் அல்லது கிராமப்புறம் பக்கம் போகிறபோது, கோதுமைக் கதிர்களில் சிவப்புக் குடையோடு பயணம் முடித்து ஓர் விடுதியில் தங்கலாம் எனப் போகிறபோது, என்னை முந்திக் கொண்டிருப்பவளாக அல்லது நான் பயணிக்கிற இரயில் பெட்டியில் சக பயணியாகவோ அல்லது எனக்கென திறக்கும் வரவேற்பு கூடத்தில் எனக்கு முன்பாகவோ காண நேரும், அதே பெண்.

நிழற்படப் பெண் அவள்தான். நிச்சயமாக, சந்தேகத்திற்கு இடமின்றி அவள்தான்! என்னை அவதானிக்கும் அவளுடைய கண்கள்; தலைமுடியை ஆங்கிலப் பெண்களைப்போல முடிந்திருக்கும் பாங்கு; குறிப்பாக அவளுடைய வாய்; வெகுகாலமாக அவளை யாரென்று யூகிக்க உதவும் அவள் புன்னகை; அனைத்தும் அப்பெண்ணை அடையாளப்படுத்தின.

"யார் இந்தப் பெண்?" எனப் பணிப்பெண்ணிடம் கேட்டேன்.

சுரத்தின்றி அவரிடமிருந்து பதில் வெளிப்பட்டது: "இதுவா... மேடம்."

நான் விடவில்லை. "அந்த அம்மாள் உங்கள் எஜமானியா?"

"ஓ! இல்லை, அப்பெண் என் எஜமானி இல்லை, ஐயா!" இம்முறை அவளுடைய பதிலில் தன் பணி நிமித்தமான கடமையோடு, சிறிது எரிச்சலும் கலந்திருந்தன.

இருக்கையைத் தேடி அமர்ந்த பின்னர், பணிப்பெண்ணிடம், "கொஞ்சம் விவரமாக அதைச் சொல்லமுடியுமா?" எனக் கேட்டேன்.

அவள் திகைத்து, அசையாமல், அமைதியாக நின்றாள்.

நான் விடுவதாக இல்லை: "படத்தில் இருப்பவர் இந்த வீட்டின் எஜமானி அம்மாள், சரியா?"

"இல்லை, அதுவுமில்லை."

"இந்த வீடு யாருக்குத்தான் சொந்தம்?"

"என்னுடைய எஜமான் தூர்னெல் என்பவருடையது."

புகைப்படத்தை நோக்கி விரலைச் சுட்டி: "அப்போது இந்தப் பெண்?"

"அது வந்து மேடம்..."

"அப்படியெனில், உங்கள் எஜமானின் மனைவி என்று சொல்?"

"இல்லை, ஐயா."

"மனைவி இல்லையென்றால் வேறு யார், உங்க எஜமானுடைய வைப்பாட்டியா?"

மடத்துப் பெண் சாயலைக் கொண்ட பணிப்பெண்ணிடம் பதிலில்லை. மாறாக, புகைப்படப் பெண்ணோடு சம்பந்தப்பட்ட மனிதருக்கு எதிராகத் தெளிவில்லா பொறாமையும் குழப்பமான கோபமும் என்னை பீடித்திருந்த நிலையில், பிடிவாதமாக என் கேள்வியைத் தொடர்ந்தேன்.

"சரி, இருவரும் இப்போது எங்கே?"

பணிப்பெண் தாழ்ந்த குரலில்: "எங்கள் ஐயா பாரீசில் இருக்கிறார். ஆனால், மேடம் பற்றிய தகவல் எதுவும் தெரியாது."

ஒரு விதச் சிலிர்ப்புடன்: "அப்படியென்றால், அவர்கள் இப்போது ஒன்றாக இல்லை?"

"இல்லை சார்."

சற்று தந்திரத்துடன், வருத்தம் தோய்ந்த குரலில்: "என்னதான் நடந்தது சொல்லுங்களேன்? உங்கள் முதலாளிக்கு என்னால் ஏதாவது உதவ முடியுமா என்று பார்க்கிறேன். எனக்கு இந்தப் பெண்ணைத் தெரியும், மோசமானவள்," என்றேன்.

பணிப்பெண், பார்வையை விலக்கிக் கொள்ளவில்லை. நான் சற்று வெளிப்படையாக பேசுவது, அப்பெண்மணிக்கு நம்பிக்கை அளித்திருக்க வேண்டும்.

“ஓ! அதை என்னன்னு சொல்றது. எங்க வீட்டு ஐயாவுக்கு அத்தனைத் துன்பத்தையும் கொடுத்தாள். இத்தாலிக்குப் போயிருந்தபோது அங்கு இருவருக்கும் பழக்கம். மணம் செய்துகொண்டதுபோல தன்னுடன் அழைத்தும் வந்தார். அவள் நன்றாகப் பாடுவாள். அவள் மீது எங்க ஐயா உயிரையே வைத்திருந்தார். அவர் நிலைமையைப் காண பரிதாபமாக இருக்கும். கழிந்த ஆண்டு, இந்தப் பக்கம் சுற்றுப் பயணமாக வந்தவர்கள், யாரோ ஒரு பைத்தியக்காரன் கட்டியிருந்த இந்த வீட்டைக் கண்டிருக்கிறார்கள்.

“அவனை உண்மையில் ஒரு பைத்தியக்காரன் என்றுதான் சொல்லவேண்டும். இல்லையெனில், கிராமத்திலிருந்து இத்தனை கல் தூரத்தில் இப்படியொரு வீட்டைக் கட்டுவானா? வீட்டைப் பார்த்த மறுகணமே அதை விலைக்கு வாங்கி, எங்க எஜமானுடன் இந்த வீட்டில் குடியிருக்க அவளுக்கு ஆசை. அவளைச் சந்தோஷப்படுத்த எங்க ஐயாவும் வீட்டை வாங்கினார்.

“கடந்த வருடம் பனிக்காலம் முழுக்க இங்கே அவர்கள் இருந்ததாகச் சொல்ல முடியாது. ஆனால். கோடைக்காலத்தை இந்த வீட்டில்தான் கழித்தார்கள்.

“ஒரு நாள் மதிய உணவு நேரம். ‘செசரின்!’ என்றென்னைக் கூப்பிட்ட முதலாளி, “வெளியில் சென்றிருந்த மேடம் வீடு திரும்பிட்டார்களா?” எனக் கேட்டார். “இல்லை ஐயா” என்றேன்.

“அன்றைய தினம் நாள் முழுக்க காத்திருந்தோம். கோபத்தின் உச்சத்தில் முதலாளி இருந்தார். எங்கெங்கோ தேடியும் கண்டுபிடிக்க முடியவில்லை. போனவள் போனவளே. ஏன் எதற்காக என்ற கேள்விகளுக்கு இன்றுவரை பதில் கிடையாது.”

பணிப்பெண் பதிலைக் கேட்டதும், எனக்குத் தலைகால் புரியவில்லை. மகிழ்ச்சியை வெளிப்படுத்த பணிப்பெண்ணை முத்தமிடவும் அவள் இடுப்பைப் பிடித்தபடி நடனம் ஆடவும் விரும்பினேன்.

ஆகத் தற்போது புகைப்படக்காரி வீட்டு உரிமையாளரோடு இல்லை! அவள் வீட்டை விட்டு போய்விட்டாள். நல்லவேளை தப்பித்தாள். இந்த மனிதரின் உறவு அவளுக்கு அலுப்பைத் தந்திருக்க வேண்டும். வெறுத்து ஒதுக்கும் அளவிற்கு அவளிடம் அம்மனிதர் நடந்து கொண்டிருக்கிறார். ஆக மொத்தத்தில் கிடைத்த செய்தியால் எனக்கு மிக்க மகிழ்ச்சி.

வயதான பணிப்பெண் இன்னும் தான் சொல்லவேண்டியது இருக்கிறது என்பதுபோல தொடர்ந்தார்: “என் முதலாளி கவலையில் வாடினார். என் கணவரிடமும் என்னிடமும் வீட்டை விற்கப் பணித்துவிட்டு, பாரிஸுக்குத் திரும்பிட்டார். வீட்டின் விலை இருபதாயிரம் பிராங்குகள்”, எனக் கூறிவிட்டு நிறுத்தினாள்.

வேலைக்காரப் பெண் கூறியவைகளை காதில் வாங்கும் நிலையில் நானில்லை! எனது நினைவெல்லாம் புகைப்பட பெண்ணிடம் இருந்தது. மறுகணம், எப்படியேனும் அவளை கண்டுபிடித்து இங்கே அழைத்து வரவேண்டும். இளவேனிற் காலத்தில் இப்பிரதேசத்திற்குத் திரும்பவும் கூட்டிவந்து, அவள் மிகவும் விரும்பிய அழகான இவ்வீட்டை, உடையவர் தற்போது இங்கில்லை என்பதையும் கூறி, திரும்பக் காணச் செய்யவேண்டும். செய்யவேண்டியது அதொன்றுதான்.

வயதான பணிப்பெண்ணின் கைகளில் பத்து பிராங்குகளைப் போட்டேன். தற்போது புகைப்படம் என் கையில். வேகமாகச் சென்று அட்டையிலிருந்த இனிமையான அம்முகத்தை வெறித்தனமாக முத்தமிட்டேன்.

மீண்டும் வந்த பாதைக்குத் திரும்பி புகைப்படப் பெண்ணை பார்த்த வண்ணம் நடந்தேன். தற்போது அவளுக்கு விடுதலை. விடுதலைக்கு பின் அவள் எவ்வளவு அழகு! அவள் காப்பாற்றப்பட்டிருந்தாள்! வீட்டு மனிதரை பிரிந்தாயிற்று. இன்றோ நாளையோ, இந்த வாரமோ அல்லது அடுத்த வாரமோ, அவளை நான் சந்திக்கப் போவது நிச்சயம்! அம்மனிதரைப் பிரிய என்னுடைய அதிர்ஷ்டமே காரணமென்றும் நினைத்தேன்.

நான் அறிந்த அப்பெண், இவ்வுலகில் ஏதோவொரு மூலையில் சுதந்திரமாக இருக்கிறாள். நான் செய்யவேண்டியது ஒன்றே ஒன்றுதான். எப்படியாவது அவளை தேடி கண்டுபிடிக்க வேண்டும்.

விளைந்த கோதுமையின் வளைந்த கதிர்கள் மீண்டும் என் கை தடவலில் இருக்க, கடற்காற்றை உள்வாங்கி என் மார்பு புடைத்தது. முகத்தில் சூரியன் முத்தமிட்டது. விரைவில் அவளைச் சந்திப்பதும் ‘விற்பனைக்கு’ என்றுள்ள அந்த அழகான வீட்டில், இம்முறை நாங்கள் வசிப்பதும் நிச்சயம். இனி தான் விரும்பும் வீட்டைப் பிரிய அவளுக்கு மனம் வராது!

எல்லையில்லா மகிழ்ச்சியுடனும் நம்பிக்கை அளிந்த போதையுடனும் நடந்து கொண்டிருந்தேன்.

---

எஸ்ப்பலியெ முன்னால் 1 (Espaliers1): ஒரு வகையான தோட்டக் கலை, பழமரங்களையும் பூச்செடிகளையும் சுவரில் பதியம். செய்வதுபோல வளர்க்கும் முறை.

மெனிர் முன்னால் 2 (Menhir2) தொல்மென் (Dolmen) இவற்றுள் முதலாவது, ஒரு வகை குத்துக்கல், இரண்டாவது படுக்கைநிலையில் உள்ள ஒரு கல். இரண்டும் இறந்தவர்கள் நினைவுச் சின்னங்கள், கற்காலங்களில் புழக்கத்தில் இருந்தவை.

**நாகரத்தினம் கிருஷ்ணா** <nakrish2003@yahoo.fr>

# முக்கோணக் கவிதைகள்

**பா. ராஜா**

1.
சிவப்பு முக்கோணத்தின்
கூர் முனையின் மீதே நின்று
நடனமாடினார்
தாத்தா.

தங்கை பிறந்த மகிழ்விற்கு
ரோஸ் நிற
முக்கோண ஐஸ் வாங்கித் தந்தார்
அப்பா.

அச்சமயத்தில்
பால் ஐஸ்
சேமியா ஐஸ் பிரபலம்.

சிவப்பு முக்கோணம்
அதைவிட பிரபலம்.

2.
முக்கோணத்தின்
மூன்று முனையிலும்
தலா ஒருவர் நிற்கின்றனர்.

மையத்தில் நான்.

அன்பின் பொருட்டு
கை குலுக்குதல்
ஒரு சமயத்தில்
ஒருவரோடு மட்டுமே சாத்தியமாகிறது.

எங்கிருந்தோ பாய்ந்து வந்த
அம்பின் முக்கோணம்
மார் துளைத்து நிற்கின்றது.

பக்கவாட்டினில் இருந்த
இருவரில்
யாருடைய முக்கோணம் அது.

3.
தடுமாற்றத்துடன்
தனியே ஓட்டுகிறாள்.

ஹேண்டில் பாரில்
முக்கோண வடிவில்
இரு கண்ணாடிகள்.

அதில்
முகம் தெரியும்படி
பின்னால் ஓடி வருகிறார்
தந்தை.

சிறிய சைக்கிளின்
சக்கரங்களின் முன்பாக
இன்னும்
இன்னும் என
விரிவடைகிறது
சிறுமியின் உலகம்.

பா. ராஜா <paaraja@gmail.com>

# தடை செய்யப்பட்ட இடம்

விட்டல்ராவ்

தடை செய்யப்பட்ட இடம்.. இப்படி ஓர் அறிவிப்பு, எனாமல் பலகையில் பளிச்சென தெரியும்படி எல்லா தொலைப்பேசி எக்ஸ்சேஞ்சுகள் வாசல் கேட்டிலும் தொங்க விடப்பட்டிருக்கும், அச்சுறுத்தினபடி இருக்கும். அறிவிப்புப் பலகையை மதிக்காது உள்ளே நுழைந்து விடமுடியாது. வாசலிலேயே இருக்கும் 'சௌகிதார்' உடனே நிறுத்தி விசாரிப்பார்.

உள்ளே பணியிலிருக்கும் யாரையாவது தேடி எவராவது வந்திருப்பார். உள்ளேயிருக்கும் தம் நண்பர் பெயரைச் சொன்னதும், அவரை அங்கேயே நிறுத்தி, உள்ளே பேசுவதற்கென்று 'டயல் இல்லாது' வைக்கப்பட்டுள்ள சௌகிதார் தொலைப்பேசிக் கருவியை எடுத்துபேசி அழைப்பார். சௌகிதாருக்கான டெலிபோன் பிரத்தியேகமாய் டயல் இல்லாமலிருக்கும், இருந்தால் அவர் டூட்டியில் பேசிக் கொண்டேயிருப்பார் என்று. ரிசீவரை தூக்கினால் உள்ளேயிருக்கும் கருவி மணியடிக்கும்.

போகப்போக இந்த கெடுபிடியெல்லாம் பிடி தளர்ந்து தொங்கத் தொடங்கியது. அவ்வாறு பிடி நழுவி வந்த நாட்களில் ஒருநாள்..

எக்ஸ்சேஞ்சுக்கு நேர் எதிரே அந்தப் பெரிய நகராட்சிப் பூங்கா, 'தேசத் தொரக, டங்குடூரி நாகேஸ்வர ராவ் காரு பூங்கா.' கெடுபிடி அதிகமா யிருந்த காலத்தில் என்னைத் தேடி வருபவர்களை அந்தப் பூங்காவிற்கு அழைத்துச் சென்று புல் தரையில் அமர்ந்துபேசிவிட்டு அனுப்பிவிடுவேன். போகப்போக தொலைப்பேசி எக்ஸ்சேஞ்சுகளில் கெடுபிடி தளர்ந்து வந்த சமயம், சௌகிதாரிடம் கூறிவிட்டு வெளி நண்பர்களை உள்ளே அழைத்துப் போகலானேன்.

ஒருநாள் பூங்காவில் வடிவேலுவைப் பார்த்தேன். வடிவேலு நகராட்சிப் பூங்கா ஓவர்சியர் பணியிலிருந்தவர். இந்தப் பூங்காவும் நேப்பியர் பூங்காவும் மைலேடீஸ் கார்டனும் (பீப்பிள்ஸ் பார்க்) அவருடைய பொறுப்பிலிருந்த பூங்காக்கள். ரிப்பன் மாளிகையிலிருந்த என் நண்பர் தாமோதர ரெட்டியார் தான் வடிவேலுவை அறிமுகப்படுத்தி வைத்தவர்.



"உங்க ஆபீசுக்கு எதிரேயிருக்கே பார்க், அங்கேதான் காலேல டூட்டி", என்றார் வடிவேலு.

"என்ன டூட்டி?" என்று விசாரித்தேன்.

"பார்கில வேலைக்கு வர்ர ஓர்க்கருங்களோட ஆஜர் பட்டியல பாக்கணும். எவனாச்சி மட்டம் போட்டிருப்பான். என்னமாச்சி அர்ஜெண்ட் வேலை, ஒடம்புக்கு நோக்காடு எதனாச்சினு, நா ஆப்சென்ட் போட மாட்டேன். வந்தமாதிரி பிரசெண்ட் போட்டிருவேன். ஆப்செண்ட் போட்டா ஒரு நாள் கூலி வெட்டாகும். பாவம். அப்பால, பார்க்ல மானு, மைலு, கிளி, புறா கொரங்கு, முயல எல்லாம் வளக்கறமே, ஜனங்க பாக்கட்டுமேனு. அதுக்கெல்லாம் தீனி கீனி வாங்கியாந்து போடறதெல்லாம் யாரு? நாந்தான். இதெல்லாம் காத்தால எட்டுக்குள்ளே செஞ்சாவணும். எல்லாமே என்னோட ட்டுட்டி", என்றார் வடிவேலு.

நான் இரவுப் பணி முடித்துவிட்டு வெளியில் வரும்போது வடிவேலு பூங்காவிலிருந்து என்னை அழைப்பார். இருவரும் சாந்தி விகாருக்கு போவோம். வடிவேலு எனக்கு டிபன் வரவழைப்பார். ஒரு வாரம் முழுக்க நைட் டூட்டியின் போது எனக்கு மறுநாள் காலையில் சாந்தி விகாரத்தில் டிபன் வாங்கித் தருவார் வடிவேலு. ஒரு நாள் பணம் தர முயன்றபோது பலமாய் ஆட்சேபித்து தடுத்துவிட்டுத் தானே கொடுத்துவிட்டார். நான் மத்திய அரசின் வீடு கட்டும் திட்டத்தில் கடன் பெற்று வீடு கட்டிக் கொண்டிருந்ததால், சக ஊழியரோடு பேசி, கிட்டதட்ட ஒரு வருடத்துக்கு நைட் டுட்டீக்கு வந்து போக, டூட்டி மாற்றிக்கொண்டிருந்தேன். இதனால், பலமுறை வடிவேலுவை காலையில் சந்திக்கும் வாய்ப்பையும் அதன்போது சிற்றுண்டி காபி பெறுவதுமாயிருந்தபோது மெள்ள சந்தேகம் கிளம்பியது. பார்க்



ஓவர்சியஸ் பணியில் சம்பளம் தவிர கிம்பளம் பெறுவது என்பது வாய்ப்பேயில்லாத தாயிற்றே, இப்படி செலவு செய்ய இவருக்கு 'ஐவேஜூ' ஏது என்ற தோன்றும்.

ஒரு நாள் தான் அவசரமாய் தொலைப்பேசியில் பேசவேண்டுமென்றார் வடிவேலு, நான் அவரை எக்ஸ்சேஞ்சு வாசலையொட்டியிருந்த ஜே இன் அறைக்கு அழைத்துச் சென்று, அங்குள்ள தொலைப்பேசியை உபயோகித்துக்கொள்ள விட்டபோது, சௌகிதார் வந்து கேள்விக்குறியோடு, என்னை தனக்கே உரிய இறுகிய டூட்டி உணர்வுமிக்க பார்வையில் பார்த்தார்.

"என் நண்பர்", என்றதும் போய்விட்டார். வாசலுக்கு அருகில் போய் சிகரெட்டு பற்றவைக்கும்போது தன் சிகரெட்டுப் பெட்டியை சௌகிதார் பக்கமாய் வடிவேலு நீட்டவும், அவர் மிக்க மகிழ்ச்சியுடன் இரண்டு சிகரெட்டுகளை எடுத்துத் தன் ஜேபியில் வைத்துக்கொண்டார். இன்னொரு முறை வடிவேலு வந்தபோது அவர் நுழைவதில் சௌகிதார் எவ்வித கேள்வியும் எழுப்பவில்லை. இது இவ்வாறு போய்க்கொண்டிருக்கையில் ஒருநாள் எக்ஸ்சேஞ்சு அதிகாரியான ஏ.இ. கவனித்துவிட்டார். அப்போதைக்கு எதையும் கேட்டுவிடாமல் பிறகு என்னையழைத்து விசாரித்தார். சமீபத்தில்தான் எக்ஸ்சேஞ்சு அதிகாரிக்கு எக்ஸ்சேஞ்சு வளாகத்திலேயே குடியிருப்பு இருக்க வேண்டுமென்று இலாகா முடிவு செய்து இங்கு மேல் மாடியில் அவருக்கு குடியிருப்பு கட்டி முடித்து அவரும் வந்து விட்டிருந்தார். நெற்றியில் ஒற்றைச் செங்கோடு கொஞ்சம் பிசிறு பிசிறாகத் (சாந்துவாக இருக்கலாம்) துலங்க புலிபோன்ற புதர் மீசையுடன் அவர் சுற்றிச் சுற்றி வருவார். அவரது ஆங்கிலம் அபாரம் என்றாலும் தெலுங்கில் பின்னும் மோகம் அதிகம். தெலுங்கு பேசும் ஊழியர்களை மோப்பம் பிடித்து தன் பக்கம் இழுத்துக்கொண்டு உறுதியாயிருந்த அந்தக் கிளையின் தொழிற்சங்கத்தை உடைக்கவும் முயற்சி செய்து பார்த்தார். அவரை 'நைநா' என்றழைப்பார்கள். ரேஸ் பிரியர்.

ஏ.இ.,"யாரந்த ஆள்" என்று கேட்டார். எதிரிலுள்ள பூங்காவின் பார்க் ஓவர்சீயர் என்றேன். நைநா கண்டிப்பு மிக்கவர். சுத்தம் பார்ப்பதில் கெடுபிடியாயிருப்பார். எக்ஸ்சேஞ்சு வளாகத்துள் அத்துமீறி யாரும் நுழைந்து விடலாகாது. அதே சமயம் சமயோஜிதமாய்த்தான் அதை கடைபிடிப்பார். ஒரு நாள் காலையில் 'ரௌண்ட்ஸ்' வரும்போது வெளியில் வரிசையாக மரச் சட்டத்தில் தொங்கவிடப்பட்டிருக்கும் மணல் நிரம்பிய சிவப்பு நிற தீ வாளிகளை நோட்டம் விட்டார். அதிர்ந்து போனார். ஒரு வாளியின் மணலில் சிகிரெட் துண்டொன்று நெட்டுக் குத்தலாம் செருகி நிறுத்தப்பட்டிருந்தது.

"சௌகிதார், சௌகிதார். இது யார் வேலை?" என்று கத்தினார் நைநா.

"தெரியில்லையே சார்?" என்றார் சௌகிதார்.

"நீயெல்லாம் எதுக்கு இருக்கறே. நீ சிகிரெட் அடிக்கிறவந்தானே, என்ன பிராண்டு, காட்டு."

சௌகிதார் தன் சீருடைப் பாக்கெட்டில் வைத்திருந்த ஒற்றைச் சிகிரெட்டை எடுத்துக்காட்டினார். அது சார்மினார் சிகிரெட்.

சற்று வளைந்து தொய்ந்திருந்தது.

மணல் பக்கெட்டிலிருந்ததுவில்ஸ் ஃபில்டர். நைநா சௌகிதாரைப் பார்த்து, "நைட்டூட்டிக்காரங்களைக் கவனிக்கணும்," என்று கூறிவிட்டு அந்த சிகிரெட் பட்டை இடது கையால் செத்த எலியைத் தூக்குவது போல தூக்கிக் குப்பைக் கூடையில் போட்டுவிட்டு கையை அலம்பிக்கொண்டார்.

அப்போதெல்லாம் ஒவ்வொரு இணைப்பகத்திலும் 60, 70 பேர் பணிபுரிவார்கள். ஒவ்வொரு பகல் பொழுது ஷிஃப்டிலும் முப்பது, நாற்பது ஊழியர்கள் இருப்பார்கள். இரவுப் பணியில்தான் 'எலும்புக்கூடு ஊழியர்கள்' (SKELETON STAFF) என்று இருப்பார்கள். இதை வைத்து இலாகாவில் ஒவ்வொரு இணைப்பகத்திலும் ஊழியர்களுக்கான காண்டீன் ஏற்படுத்தப்பட்டன. கண்டீனுக்கு பெரிய இடம் தேவைப்பட்டது. அன்றைய நாட்களில் அதெல்லாம் எளிது. 1975 வரை சென்னைத் தொலைப்பேசியில் ஒரே ஒரு காண்டீன்தான் இலாகாவால் நடத்தப்பட்டு வந்தது. சைனா பஜாரிலுள்ள சென்னைத் தொலைப்பேசியின் தலைமைப் பீடமான பூக்கடை எக்ஸ்சேஞ்சில் இயங்கி வந்த காண்டீன் மிகப் பெரியது. 1500 ஊழியர்களுக்கு காபி, டீ, போர்ன்விடா, ஹார்லிக்ஸ் சிற்றுண்டி வகை மதியச் சாப்பாடு, இரவு பணியிலிருப்போரின் தேவைக்கான உணவு வகைகள் என்றெல்லாம் வழங்கி வந்தது. இலாகா காண்டீன்களுக்கு கிராண்ட் தொகையை தாராளமாய் வழங்கத் தொடங்கவும், 1981-ல் ஒவ்வொரு இணைப்பகத்திலும் காண்டீன் வசதி ஏற்படுத்தப்பட்டது.

ரெயில்வே இலாகாவுக்கு அடுத்தபடியாக அரசுத் துறைகளில் பரந்த இடங்களைக் கொண்டு பெரிய கட்டிடங்களைக் கொண்டிருந்தவை தொலைப்பேசி இணைப்பகங்கள். தொலைத்தொடர்பு, இராணுவ தொலைத்தொடர்பு இணைப்பகக் கட்டுப்பாடு, சிறப்பு சர்க்யூட்கள் என்று முக்கிய ரகசியமிக்க விஷயங்களை உள்ளடக்கியதாலும், விஷமிகள் தேசத் துரோகிகளால் இவை பாதிக்கப்படக்கூடாது என்பதாலும் 24 மணிநேரமும் செக்யூரிடி வைத்து எக்ஸ்சேஞ்சுகள் பாதுகாக்கப்படும். அதனால்தான், 'தடை செய்யப்பட்ட இடம், அந்நியர்கள் நுழையக்கூடாது. அத்து மீறுபவர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுக்கப்படும். டூட்டியிலுருக்கும் ஊழியருக்கு மட்டுமே அனுமதியுண்டு', என்றெல்லாம் எச்சரிக்கை அறிவிப்புகள் தொலைப்பேசி எக்ஸ்சேஞ்சுகளின் வாசலில் வைக்கப்பட்டிருக்கும். இப்போது எதுவுமே இல்லை.

எங்கள் இணைப்பகத்துக்கும் ஊழியர் காண்டீன் வந்தது. கடைநிலை ஊழியர்கள் இருவரால் பார்த்துக் கொள்ளப்பட்டது. கடைநிலைப் பெண் ஊழியரையும் சேர்த்தார்கள். தேநீர், காபி, பிஸ்கட் என்று தொடங்கி உப்புமா, வடை, தயிர் - எலுமிச்சை - தக்காளி சாத வகைகளும் தயாரிக்கப்பட்டன. பெரிய மேஜைகள், பெஞ்சுகள் போடப்பட்டன. மதிய உணவு வேளையில் ஊழியர்கள் அங்கு அமர்ந்து பேசியபடி, பாடியபடி, புகைத்தபடி இருப்பார்கள். அரசியலும் சினிமாவும் தொழிற்சங்கமும் மிகவும் சூடுபிடித்து சூடேறி விவாதிக்கப்பட்டன. காண்டீன் பேச்சில் பெண் ஊழியரும் கலந்துகொள்ளுவார்கள். காண்டீனுக்கருகாகவே மனமகிழ் மனறமிருக்கும். கேரம், சதுரங்கம், சீட்டுக்கட்டு உண்டு. மாலையில் பளுதூக்கவும் வசதி உண்டானது.

உணவு மேஜைகளுக்கு அடியில் சிகரெட் துண்டுகள், பீடித் துண்டுகளாய்க் கிடப்பதை ஒரு காலை ரௌண்ட்ஸின் போது அங்கு வந்த அதிகாரி நைநா கவனித்து முகஞ்சுளித்து கடுங்கோபமடைந்தார். காண்டீனையே எடுத்துவிடப்போவதாகமிரட்டினார். யாருமே அதைக் கண்டுகொள்ளவில்லை என்பது புரியும்போது நைநாவுக்கு மேலும் கடுப்பேறியது. உடனே அவர் வேகமாய்த் தன் வீட்டுக்குப்போய் ஒரு காலி போர்ன்விடா டப்பாவுடன் திரும்பி வந்தார். குனிந்து மேஜைக்கடியில் உட்கார்ந்து ஒவ்வொரு சிகிரெட் துண்டையும் எடுத்தெடுத்து டப்பாவில் போட்டுக்கொண்டே போனார்.

இப்படியாக சாப்பாட்டறை காண்டீனின் பகுதிகளிலெங்கும் கிடந்த எல்லா சிகரெட்டுப் புழுக்கைகளையும் பொறுக்கி டப்பாவில் போட்டுக்கொண்டதை காண்டீனுக்கு வரத் தொடங்கியவர்கள் கவனித்து விட்டனர். தங்கள் இணைப்பக அதிகாரியே தாங்கள் புகைத்து விட்டுப் போட்ட சிகிரெட் துண்டுகளைப் பொறுக்கி டப்பாவில் போட்டு அகற்றுகிறார் என்பதைத் தாங்க முடியாத அவர்களில் ஓரிருவர், "சார்... சார்.." என்று கத்தியவாறு டப்பாவைப் பிடுங்க முற்பட்டார். இது நைநாவை மேலும் ரோஷமூட்டியிருக்கலாம் அல்லது இன்னும் கொஞ்சம் இவர்களுக்கு சுரணையும் ரோஷமும் உண்டு பண்ணலாமென்று இருந்திருக்கலாம். "வுடுங்கய்யா, வுடுங்கய்யா", என்றவாறு அவர் டப்பாவை அவர்களிடம் விடாமல் பிடுங்கினார். கடைசியாக அவர்கள் அதைப் பிடுங்கிச் சென்று குப்பைத் தொட்டியில் கொட்டினர். அவர்கள் திரும்பினபோது நைநா ஒரு சிறு சொற்பொழிவாற்றினார்.

"இந்த எக்ஸ்சேஞ்சில, நாம்ப குடிச்சிட்டுப் போடுற சிகிரெட் பட்ஸ பொறுக்கி எறியறதுக்கு ஒரு பொழப்பு கெட்ட ஏ.இ. இருக்கானுங்கற எண்ணத்துல நீங்கெல்லாம் தினமும் இப்பிடி காண்டீன்ல, ஃபயர் பக்கெட்ல, யார்டில எல்லாம் சிகிரெட் குடிச்சிட்டு எறியரீங்க இல்லையா?" என்றார்.

அதன் பிறகு அவர் தம் வீட்டிலிருந்து காலி டப்பாக்களை எடுத்து வந்து, இரவுப் பணியில், பகல் போதில், எக்ஸ்சேஞ்சு வளாகத்தில் எங்கெங்கு சிகரெட் பிடிப்பார்களோ அங்கெல்லாம் ஒவ்வொரு டப்பாவை வைத்தார். அதன்பிறகு ஊழியர்கள் புகைப்




பிடித்துவிட்டு துண்டு சிகிரெட், பீடிகளைக் கண்ட இடங்களில் போடுவது நின்று போனது.

இந்த நைநா, நான் வடிவேலுவை எக்ஸ்சேஞ் சுக்குள் அழைத்து வந்து டெலிபோனை உபயோகித்துக்கொள்ள விட்டதைக் கவனித்துவிட்டு ஒரு நாள் பிடித்துக் கொண்டார்.

"சரி நம்ம எக்ஸ்சேஞ்சையும் கொஞ்சம் கவனிங்க", என்றார். வடிவேலுவைப் பார்த்து. வடிவேலு, என்ன செய்ய வேண்டுமென்றார்.

"எக்ஸ்சேஞ்சைப் பாருங்க, காஞ்சிக் கிடக்குது. கொஞ்சம் பச்சைப் பசேல்னு ஆக்கி, கண்ணுக்கு அழகா பூச்செடி, குரோடன்செல்லாம் வச்சிக் குடுத்தீங்கனா நல்லாயிருக்கும்", என்றா நைநா.

"செஞ்சா போச்சி. நாளைக்கு காலையில ரெண்டாளுங்களை வுடறேன். எல்லாம் பாத்துக்குவாங்க. டீ செலவை மாத்திரம் நீங்க பாத்துக்கங்க," என்றார் வடிவேலு.

"அதுக்கென்ன, காண்டீன்ல சொல்லி வைக்கறேன். இவங்க அங்கே போய் டீ சாப்புடலாம்" என்றா நைநா.

மறுநாள் காலையில் இரண்டு பேர் கடப்பாறை மண்வெட்டியுடன் தொலைப்பேசி இணைப்பகத்துக்குள் நுழைய முற்பட்டபோது சௌகிதார் தடுத்து நிறுத்தி, வாக்குவாதம் செய்து, வடிவேலு வந்து, நைநாவை அழைத்து பிறகு எல்லாம் சுபம். எக்ஸ்சேஞ்சில் சிறு பூங்கா ஒன்றுக்கான ஏற்பாடு நடந்துகொண்டு வருகையில், வடிவேலு நைநாவிடம் நயமாய்க் கேட்டுக்கொண்டார்.

"சார், எஸ்.டி.டி.கால் ஒண்ணு பண்ணிக்கணும், கோயமுத்தூருக்கு."

"அதுக்கென்ன, தாராளமா," என்று கூறிவிட்டு நைநா, ஜேஇ அறையிலுள்ள தொலைப்பேசியில் எஸ்டிடி டைனமிக் பூட்டை அலிபாபா குகைக் கதவைத் திறப்பதுபோல் ரகசிய எண்களால் திறந்து, "செஞ்சிக்கங்க," என்று கூறிவிட்டுப் போய்விட்டார்.

வடிவேலு எஸ்டிடி அழைப்புக்காக காய்ந்து கிடந்தாற்போல அந்த டெலிபோன் கிடைத்ததும் கம்பில் புகுந்தார். எந்தெந்த ஊர்க்களுக்கோ இஷ்டத்திற்கு பேசிவிட்டு எழுந்து போனார். மினி பூங்காவும் தயாராகி வந்தது. எதிரிலுள்ள பெரிய பூங்காவிலிருந்து நிறைய விதவிதமான குரோட்டன்ஸ், பூச்செடிகளைக் கொண்டுவந்து வைக்கச் செய்தார் வடிவேலு. நைநாவின் குடியிருப்புக்கும் ரோஜா முதலிய செடிகள் கொண்ட மண் சட்டிகளை அனுப்பினார்.

வேலைக்காரர்கள் கேண்டீனில் தேநீர், சிற்றுண்டிக்குப் போவதும் வருவதுமாய், அந்த இடம் சுருசுருப்பாய் இயங்கியது. சௌகிதாரின் வாய் டைனமிக் பூட்டால் பூட்டப்பட்டிருந்தது. யாரையும் எதுவும் கேட்க முடியவில்லை. இத்தனைக்கும் தடைசெய்யப்பட்ட இடம் அது. வடிவேலு நினைத்தபோது நுழைவார், போவார். அவரை டெலிபோன் எக்ஸ்சேஞ்சில் எல்லோருக்குமே நன்கு தெரிந்திருந்தது. சிலர் கேட்டுக் கொண்டதற்கிணங்கி அவர்களின் வீட்டில் வைக்க பூச்செடிகள், கல் வாழை - தினுசுகளை வடிவேலு அவர்களுக்கும் எடுத்து வந்து கொடுத்தார். அவர்களில் ஒரு டெக்னீஷியன், டெலிபோனில் எஸ்டிடி செய்ய டைனமிக் பூட்டைத் திறக்கவும் பூட்டவும் வடிவேலுவுக்கு கற்றுத் தந்துவிட்டார். பிறகு நைநாவின் தயவின்றியே வடிவேலுவுக்கு எஸ்டிடி செய்வதில் கொலை குத்து.

வெகுநாட்களுக்குப் பிறகு ஒரு நாள் நைநா காண்டீனுக்குள் நுழைந்தார். அவரது கண்கள் அகல விரிந்தன. மேஜைகளின் மேல், மேஜைகளுக்கடியில் வெராண்டாவில் என்று நிறைய இடங்களில் சிகிரெட்டுப் புழுக்கைகள். அங்குமிங்கும் சிதறிக் கிடந்தன. அவர் வைத்த போர்ன்விடா டப்பாவில் வெற்றிலைப் பாக்கு எச்சில் துப்பியிருந்த சுவடு தெரிந்தது.

"இதையெல்லாம் யார் போட்டது?" என்று காண்டீனிலுள்ளவர்களைப் பார்த்து கடுமையாகக் கேட்டார்.

"சார், யார் யாரோ வர்ராங்க, போறாங்க. கேட்டா தோட்ட வேலைக்காரங்கறாங்க. பார்க் ஓவர்சீயரைக் கேட்டுக்கங்கறாங்க. சௌகிதாரைக் கேட்டா, நம்ப ஆபிசர்தான் அனுமதிச்சி வுட்டிருக்காருனு சொல்றாரு," என்றார் காண்டீன் டீ மாஸ்டர். நைநா மௌனமாக வெளியேறினார்.

இப்போது எக்ஸ்சேஞ்சுக்குள் நுழைந்தால் கண்ணுக்கு அழகாய் ஒரே பூச்செடிக்களும் குரோட்டன்சுமாய்.

(தொடரும்)

# தர்மினியின்
# அயலாள்

சு.கஜன்

பிரான்ஸ் நாட்டில் வசிக்கும் கவிஞர் தர்மினியின் மூன்றாவது கவிதைத் தொகுப்பு இது. அயல் நாட்டில் வசிப்பதால் அங்கு தான் பார்க்கும் நிகழ்வுகளை அல்லது அங்கு வசிப்பதால் தனக்குள் ஏற்படும் உணர்வுகளை கவிதையாக வடித்திருக்கின்றார். அந்தவகையில், அயல்நாட்டில் அல்லது அயல் வீட்டில் வசிக்கும் ஒருவர் எழுதிய கவிதையாக இதனைக் கருதலாம்.

யுத்தம், சாவு, பிரிவு, இருப்பு, நிலைபெயர்க்கப் பட்டவர்களின் துயரம், புலம்பெயர் வாழ்வின் சலிப்பு, புலம்பெயர் அகதியின் வலி, கையாலாகாத்தனம், புரிந்தும் புரியாமலும் போக்கு காட்டும் காலம், அக்காலம் ஏற்படுத்திய தழும்பு, காத்திருப்பு போன்றனவே பெரும்பான்மை கவிதையின் முக்கிய மையக் கரு. இது தவிர பெரிய விஷயங்களில் கோபம், சிறிய விஷயங்களில் கொண்டாட்டம், பண்பாடு கலாச்சாரம் என்ற பெயரில் நடைபெறும் கேலிக்கூத்து என வாழ்வியல் அனுபவங்களின் பொதுப்பதிவாகவும் காணப்படுகின்றது.

“உண்மையோடு உறவுகொள்ளாத எதுவும் கவிதை ஆவது இல்லை” என்பார் மா. அரங்கநாதன். இத்தொகுப்பில் உள்ள பெரும்பாலான கவிதைகள் ஏதோ ஒரு வகையில் உண்மைக்கு நெருக்கமாக இருக்கிறது.இவ்உண்மைத்தன்மையேஇக்கவிதைகளை மேலும் அழகாக்கிவிடுதோடு மட்டுமல்லாமல் வேறுபட்ட மற்றும் விரிவான அர்த்தத்தையும் வழங்குகிறது.

கவிதை என்பது உணர்வைக் கடத்தும் வாகனம். ஆகவே, ஒரு கவிஞர் அவருடைய வாழ்க்கைக்கு மிகவும் நெருக்கமான அனுபவத்தை, படைப்புகளாக தரும்போது, தான் பார்த்ததை அதனால் ஏற்பட்ட தாக்கத்தை, அதனிலிருந்து கிளம்பும் தன்னுணர்வை அவருக்கு வெறும் தகவல்களாக கோக்காமல் தனது பாணியில், தனது கவித்துவ மொழியில் கவிதை புனைவது முக்கியம். அந்த வகையில் தர்மினி தனது சூழலையும் மனிதர்களையும் அவதானித்து சில இடங்களில் எள்ளலாகவும், பல இடங்களில் தீவிரமாகவும் கவிதைகளை புனைந்துள்ளார். புரியாத்தன்மை, வார்த்தைத் திருகல் எதுவுமின்றி எளிமையான மொழியில் தன்னைப் பாதித்த காட்சிகளை, சம்பவங்களை, நிகழ்வுகளை பதிவு செய்கிறார். அவற்றுள் சில வரிகள் நம்மை போதைக் குள்ளாக்குகின்றன, சில தெளியவும் வைக்கின்றன.



அகதிகளை பற்றிய வரிகள் தீவிர பாய்ச்சலின் போது உருவானவை எனக் கொள்ளலாம். ஒவ்வொரு முறை படிக்கும்போதும் புதுப்புதுக் கருத்துக்கள் வெளிப்பட்டு, புதுப்புது அர்த்தங்களையும் விலாசங்களையும் தருகின்றது. “கவிதை என்பது சக்தி. பாயக் கூடிய சக்தி” என்ற பிரமிளின் வரிகள் ஞாபகம் வருகிறது.

யுத்தத்தினைக் கடந்து வந்தவர்களின் படைப்பு களில் பயன்படுத்தப்படும் வார்த்தைகள், படிமங்கள், குறியீடுகள் போன்றன வேறு ஒரு தளத்திலும் பரிமாணத்திலும் பயணிக்க கூடியதாக இருக்கும். இதிலுள்ள படைப்புகளும் பிறிதொரு தளத்தை தொடுவதற்கு காரணமாக இருப்பது போரின் ஊடாக அவர்கள் கடந்து வந்த பாதையாகும்.

மண்ணில் எழுதி பழகிய மொழியொன்று
விரும்பிக் கற்றது மற்றொன்று
அகதியாக அறிந்தது இன்னொன்று
அமொழிகளை மீறி
என் கனவுகளின் மொழி வேறொன்று

என்ற கவிதை வரிகளின் ஊடாக அகதிகளின் வலியை தத்துரூபமாக படம்பிடித்துக் காட்டி யிருக்கின்றார். அகதிகளை பற்றிய இவரது கவிதைகள் யுத்தம், இடப்பெயர்வு, புலம்பெயர் நாட்டில் தஞ்சம், அகதி வாழ்க்கையின் முரண், அகதியின் இயலாமை, அதனால் ஏற்படும் விரக்தி போன்றனவற்றின் மையத் திலிருந்து வேர்கொண்டெழுந்திருக்கின்றன.

ஒரு கவிஞருக்கு பார்க்கின்ற காட்சிகள் அல்லது சந்திக்கின்ற சம்பவங்கள் எல்லாம் கவிதைக்கான மூலப் பொருள்தான். நாடு என்பது வெறும் நிலமல்ல, மக்கள்தான் அவர்களுக்கு நாடு. இங்கு அவன் அல்லது அவள் என இரு பாலரையும் அழுத்திச் சொல்ல வேண்டிய தேவை இருக்கிறது. ஏனெனில், இதில் கவிதையொன்று அதற்கான வேண்டுகோளை முன்வைக்கின்றது.



இடைவெளிகளில்
பெண்பால் சொற்களை நிரப்புங்கள்
அப்பாவை அவர் என்றும்
அம்மாவை அவளென்றும் படித்தவற்றை திருத்துங்கள்
அண்ணாவை இவரென்றும்
அக்காவை இவளென்றும் இருப்பவற்றை கவனிக்க

*என்ற கவிதை பெண்பாலுக்குரிய இடத்தைவழங்கவேண்டும்என்றசிந்தனையை வாசகருக்கு ஏற்படுத்திவிடுகிறது. அவ் வேண்டுகோளைக் கூட இதைக் கொஞ்சம் பாருங்க,கவனிங்க என்று தன்மையாகத்தான் முன்வைக்கின்றார். தனது படைப்பின் மூலம் ஒரு சிக்கலுக்கு தீர்வை சொல்லல் அல்லது தீர்வை வாசகர்களுக்கு விட்டுவிடல் என்பதை தாண்டி தனது மனவெளியின் உணர்வை பதிவு செய்கிறார்.*



*பிரியமான நபர் இறத்தல் அல்லது பிரிதல், புலம்பெயர்தல், வாழ்வியல் நிலைமை சற்று கீழ் இறங்குதல் போன்றவற்றால் உருவாகும் சோகம் மற்றும் மனச்சோர்வின் கூட்டு உணர்ச்சியே 'நொஸ்டாலஜியா' எனப்படும். தனது சொந்த ஊரை விட்டு பிறிதொரு ஊரில் அல்லது நாட்டில் வசிப்பவருக்கு 'நொஸ்டாலஜியா' என்பது தவிர்க்க முடியாத ஒரு மனச்சிக்கலாக காணப்படும். 'நொஸ்டாலஜியா' என்பது கிரேக்க மொழியிலிருந்து வந்த ஒரு சொல். நொஸ்டாஸ் என்றால் திரும்புதல், அல்கியா என்றால் வலி. ஆகவே, நொஸ்டாலஜியா என்னும்போது வலி மிகுந்த உலகிற்குள் அல்லது நினைவிற்குள் திரும்புதல் எனப் பொருள்படும். தர்மினியின் பெரும்பாலான கவிதைகளில் இந்த 'நொஸ்டாலஜியா' பிரதான பங்கு வகிக்கின்றது.*

*மேசை மாம்பழம், பூ மனம், வைக்கோல்களில் பொதிந்த பழங்கள், தொட்டாற்சுருங்கி இலைகள், பூவரசில் ஆடும் சிறுமி, எண்பதுகளின் வானொலிப் பாடல், குண்டு மணி, ஆமி, ஷெல், அடையாள அட்டை, ஊரிகள், சிப்பிகள், பாசிகள், படகுகள் என அனைத்தையும் தனது கவிதைகளில் ஆங்காங்கு பதிவு செய்வதன் ஊடாக தானும் ஒரு 'நொஸ்டாலஜியா' தாக்கத்திற்குட்பட்ட கவிஞர்தான் என்பதை வெளிப்படுத்துகிறார்.*

உலுப்பி விழுந்த நெல்லிக்காய்களின் சத்தங்களை
மென்று துப்பும் நினைவுச் சுவை
புளிப்பு

*என்றகவிதைவரிகள்,படைப்பாளிகாலப்பாம்பின் மீது பயணம் செய்து தனது 'நொஸ்டாலஜியா' உலகிற்குள் சென்று வடித்த கவிதைக்கு ஒரு சான்று.*

எழுதாமல் விட்டவைகளின்
அனுதாபத் கரைச்சல்
பசியை விட மோசம்

*வாழ்வியல் சுமைகளின் ஊடாக தமது சொந்தக் கனவுகளை துரத்தும் மனிதர்களின் வலியை ஆழமாக பதிவு செய்கிறது இக்கவிதை. இது வெறுமனே எழுத்தாளர்களுக்கு மட்டுமல்லாமல் கலைஞர்களுக்கு அல்லது தமது கனவுகளை அடைய போராடும் மனிதர்களுக்கு இந்த அனுதாபக் கரைச்சல் தொடர்ந்து கொண்டேதான் இருக்கின்றது.*

*சமூக வலைத்தளம் என்பது அதிகளவான வன்மத்தை வெளிப்படுத்தும் இடமாக மட்டுமல்லாமல், தன்னை நிரூபிப்பதற்காக வார்த்தைகளால் யாரையும் குத்திவிடும் போக்கும் இங்கு அதிகமாக் காணப்படுகின்றது. இதனால் ஏற்படும் கோபத்தை கட்டுப்படுத்த நட்பு நீக்குதல்தான் தனக்குத் தெரிந்த ஒரே வழி என்கிறார் கவிஞர். தொழில்நுட்பம் நமக்குள் ஏற்படுத்தும் இயலாமையின் வெளிப்பாடுதான் இந்தக் கவிதை.*

குத்திவிடும் குரூரத்தை
கற்பனையின் வன்மத்தை
அமைதியான பெண் நான் என்ன செய்வேன்
கணினி முன் போய்யிருந்து
நட்பு நீக்கத் தொடங்குகிறேன்

சரி நட்பு பட்டியலில் இருக்கும்
செத்துப் போன
நான்கு கவிஞர்களை என்ன செய்வாய்
நினைவுக்கு இருக்கட்டும்.

*தீவிரத்தன்மை இல்லாத அல்லது வணிக மயப்பட்ட எழுத்துக்கள்போலல்லாமல்காத்திரமான இலக்கியபடைப்பாகவேவெளிவந்திருக்கும்'அயலாள்' மனிதவாழ்வின் அவலங்களையும் அழகுகளையும் ஒன்றுசேரப் பதிவு செய்திருக்கின்றது.*

**சு.கஜன்** gajan2050@yahoo.com

---

அயலாள் (கவிதைத் தொகுப்பு) – தர்மினி; விலை ரூ. 71; வெளியீடு: கருப்பு பிரதிகள், மின்னஞ்சல்: karuppupradhigal@gmail.com, தொலைப்பேசி: +91 94442 72500

# கழிப்பறைக் காகிதங்களா சுற்றுச்சூழல் முயற்சிகள்

**சுப்ரபாரதிமணியன்**

சமீப ஆண்டுகளில் நிகழ்ந்துவரும் நோய்த்தொற்றும் பேரழிவுகளும் பல ஆண்டுகளுக்கு தொடரும் என்பதை உலகின் வெப்பநிலை உயர்வால் அறிந்துகொள்ள முடிகிறது. வெறும் 1.5 டிகிரி வெப்பம் உயர்ந்தால் ஒரு பில்லியன் மக்கள் கடுமையான வெப்பத்தால் பாதிக்கப்படுவார்கள் என்பதை ஸ்காட்லாந்து நாட்டிடு கிளாஸ்கோ காலநிலை மாற்றத்தின் அறிகுறிகள் பற்றிய மாநாடு தெரிவித்திருக்கிறது.

இந்த மாநாட்டில் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டு இருக்கின்றன. இதுவரை நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களும் ஒப்பந்தங்களும் வெறும் கழிப்பறைக் காகிதங்களாக நின்றுவிட்டன என்று விமர்சிக்கும் சுற்றுசூழல்வாதிகளும் இருக்கிறார்கள்.



புதைபடிவ எரிபொருளில் இருந்து புதுப்பிக்கத்தக்க எரிசக்தியை உயர்த்துவதன் மூலம் இந்த வெப்ப நிலை உயர்வை தவிர்க்கலாம். ஆனால், அதனால் ஏற்படக்கூடிய மிகப்பெரிய நஷ்டத்தை ஏற்றுக்கொள்ள கார்ப்பரேட் முதலாளிகள் தயாராக இல்லை. அதையும் கடந்து சூழலியல் அக்கறை என்பது கார்ப்பரேட் முதலாளிகளுக்கு அவ்வப்போது மனதில் வருவது தங்களின் தொழிலை காப்பாற்றிக்கொள்கிற அக்கறையால்தான். முதலாளித்துவ உலகின் பொருளாதார அமைப்பு அடித்தளம் லாபவெறி. பசுமைக்குடில் வாயுக்களை குறைப்பது,கரியமிலவாயுவைக்குறைப்பதுபோன்றவை லாபத்தை பாதிக்கும் என்பதால் நடைமுறையில் அவர்கள் இவற்றில் அக்கறை செலுத்துவதில்லை.

புவி வெப்பமயமாதல் தொடர்ந்து அதிகரித்தால் கடந்த நூற்றாண்டுகளுக்கு முன்பு நிகழ்ந்த பேரிடர்கள் இனிமேல்சாதாரணமாக ஒவ்வொரு ஆண்டும் நிகழும் என்பதும் எச்சரிக்கையாக இருக்கிறது.

கட்டுப்படுத்தாவிட்டால் என்னவாகும்? இந்தியாவில் சுமார் 20 கோடி மக்கள் நீரின்றி தவிப்பார்கள். இமயமலை உருகி பல பகுதிகள் காணாமல் போகும். பல நகரங்கள் கடலுக்கடியில் போய்விடும். பல புதிய தொற்று நோய்கள் உருவாகும். மழையின்றி வேளாண்மை அழியும். நூறு கோடி மக்கள் பட்டினியால் மடிவார்கள்.

இதிலிருந்து தப்பிப்பதற்காக வேறு கிரகங்களுக்கு சென்று குடியேறும் திட்டங்களைப் பற்றியும் விஞ்ஞானிகள் பேசிக்கொண்டிருக்கிறார்கள். செவ்வாயில் நாம் குடியேறுவது அடுத்த தேர்வு என்று மறைந்த ஸ்டீபன் ஹாக்கின்ஸ் சொன்னார். அப்படி வேறு கிரகங்களில் சென்று குடியேறும் வாய்ப்புகள் வசதியுள்ளவர்களுக்கு வாய்க்கும். சாதாரண மக்களுடைய வாழ்க்கை மிகுந்த சிரமம் ஆகிவிடும்.

நிலக்கரி, பெட்ரோல் உள்ளிட்ட புதைபடிவ எரிபொருட்களை எரிப்பதால் புவி வெப்பமாதல் அதிகரிக்கிறது. இதற்கு காரணமான பசுமை இல்ல வாயுக்களின் வெளியேற்றத்தை இந்த நூற்றாண்டில் பாதிக்கும் கீழாகக் கொண்டு வருதல் என்பது பல ஆண்டுகளாக பேசப்பட்டு வருகிறது. வரன்முறை இல்லாமல் கனிம வளங்களைச் சுரண்டுதல், காடுகளை அழித்தல், நீர்நிலைகளை அழித்தல் சுற்றுச்சூழலை நாசம் செய்யும் தொழிற்சாலைகளை உருவாக்குதல், அவை வெளியேற்றும் கழிவுகள் ஆகியவையே பருவநிலை மாற்றத்திற்கும் புவிப் வெப்பமாதலுக்கும் முக்கிய காரணமாக இருக்கின்றன.

நிலக்கரியின் பயன்பாட்டை படிப்படியாகக் குறைக்க வேண்டும் என்று பல்வேறு சமயங்களில் சொல்லப்பட்டன. ஆனால், இந்தியா போன்ற நாடுகளில் அவை குறைந்தபடில்லை. அமெரிக்கா, சீனா உள்ளிட்ட நாடுகள் வாக்குறுதி தருவதும் பின்னால் தயங்குவதும் என்று தெளிவற்ற பாதையை பல சமயங்களில் வெளிப்படுத்தியிருக்கிறார்கள். எந்த ஒரு தனி நாட்டையும்விட புதைபடிவ எரிபொருள் நிறுவனங்களின் எண்ணிக்கைகள் உயர்ந்துகொண்டே இருக்கின்றன.

சுற்றுச்சூழல் மாசுபாடு தொடர்ந்து வரும் சூழ்நிலையில் இது சார்ந்தப் போராட்டங்கள் மக்களிடம் விழிப்புணர்ச்சியை கொண்டுவர முயன்று கொண்டிருக்கின்றன. அதை சாதாரண மக்களும் தம் வாழ்க்கையில் கடைபிடிக்க வலியுறுத்தப்படுகிறது. இல்லாவிட்டால் நரக வாழ்க்கைக்கு மனித இனம் தலையைக் கொடுத்துக்கொண்டே இருக்க வேண்டியதுதான்.

**சுப்ரபாரதிமணியன்** <subrabharathi@gmail.com>

**published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116. Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.**
**Editor : PRABHU THILAAK**

